ற்றினர். பின் தெவ்வழிய வென்று அவ்வழியாக மீண்ட நீ இவ்விளவல் ஒளவியங்கொண்டு வெவ்வழிசெய்தானெனக்க ருதிச் செவ்வியலோடு அவன் எவ்வெவ் வழியாகச் சமாதானங்கூறியும் ஒவ்வுதல்செய்யாது அவனைக் கௌவைசெய்து கவ்விக் கடித்து அடித்து, நவ்வையலைக்கும் பௌவமென அலைத்ததனால் அவன் எவ்வெப்புறத்தும் ஓடியும் அவ்வப்புறத்தும் சென்று அடர்க்க எவ்வாறுங்காணாது ஆலைக் கரும்பும் வேலைத்துரும்பும் போலலைந்து இவ்விரிசிக முகவரைக் கூலத்துச் செவ்வி யடைந்துய்ந்தனன். நீ அத்திவ்வியவன்னிசாபவரம்புடைமையின் அவ்வரையுழைச்சேறலை, இத்துணையோடும் அமையாது அத்துணைவனது உரிமையென்னும் உருமையையும் அரசுரிமையையும் ஒருங்கே நினக்கு உரிமையாக்கிக் கொண்டனை. உலகில்மிகக் கற்றவரானும் உறப்பெற்ற உரனும் தரம்பெற்ற வரனும் உடையனானாலும் மற்றொருவன் உரிமையை வௌவ்விழைவோன் அவற்றை உறுதவனாகி உயிரோடிருந்தும் உயிரிழந்த சவத்தோடொப்பன். அவன்கண் "பகைபாவம் அச்சம் பழியென நான்கும் இகவாவாம்" என்பது சத்தியம். இங்ஙனம் நீயே இவ்வாறொழுகுவையாயின் நின் கீழமைந்த உயிர்த்தொகைகள் எவ்வாறாம்? அரசனெவ்வழி குடிகளவ்வழி என்பது கேட்டிலையா? "தனக்கின்னா இன்னா பிறர்க்கு" என்பது அனுபவமொழியன்றோ. இதையுணராமல் அவற்குத்துயர்ப்படுத்தி நகர்ப்புறத்தோட்டின முதற்குறையும் மனைக்கிழத்தியை வயப்படுத்தின இடைக்குறையும் இயற்றிக் கடைக்குறைப்பட்டனை. அன்றியும் அவனுடன் தோன்றி மனந்திரிந்து நடுநிலையிழந்து கெடுதலடையாநின்று, "கெடுவான்கேடுநினைப்பான்" என்பதையும் "பிறர்க்கின்னா முற்பகல் செய்யிற் றமக்கின்னா பிற்பகல்தாமேவரும்" என்பதையும்விளக்கிக்காட்டினை. அதற்கு யார் என்செய்யத்தக்கது இவ்வழுவுக்கு யாது அமைதியுள்ளது? நீ நினைக் காதலுடையையாயிருந்தாயாயின் இத்தீவினைப் பாலைதன்றோ, நிருபவை. எவ்வகைப்பகை யடைந்தோரும் கடைத்தேறுவர். தீவினைப்பகையானது பின்னேதொடர்ந்து கொல்லும். அந்தோ இச்சகோதர தாராபகாரமாகிய முறைவழுவும் மரபுவழுவும் கலிபுருஷருள்ளையிலும் நிகழ்தலரியதே இதுநிற்க,

சுக்ரீவனே " செய்வானைநாடி வினைநாடிக்காலத்தோடெய் தவுணர்ந்து செயல் " என்றவாறு செய்வித்தனன். இது அரசாக்குரிய உபாயம், இது தவறன்று. நடவாத நடைநடந்தால் அண்ணன் தமபி அன்னையாதி யோராயினும அன்னோரைத்தண்டிப்பது அறச்செய்கையன்மையன்று, அருந்தவத்துயாந்த பரசுராமன் அன்னையின் சிரசை அறுத்தனனன்றே. காயத்தில் தோன்றி வருத்தும கழலையை அறுப்பித்து சுகபபடுதல் இயற்கையல்லவா? யான் அவற்குத் துணையாகி இவ்வாறு செய்ததும புகழ்குறித்தன்று, அன்பும் அருளும பயனும் குறித்தென்க. அலலற்பட்டாற்றாது அடுத்தவரை ஆதரிபபதன்றே அவற்றிற்குருபு. தீக்கொளுவுவோர் நஞ்சிடுவோர், படையிற்கொல்வோர், கள்வர், வழியலைபபோர், கொள்ளையிடுவோர், பிறனில்லாளை விருமபுவோா இவர்முதலாய கொடியாரை ஒறுத்தல் பைங்கூழ்களைகட்டதனோடு நேரன்றே. அங்ஙனம் தண்டியாவழிப் புல்லுக்களைகரு அஞ்சாநின்ற பயிர் போன்று பலவருத்தமடைந்து, உலகுதுன்புறும், ஆகவேயான் நின்னைக் கட்டது அடாவழித்தன்று, உடுக்கை இழந்தவன்கைபோல என்னோடுமனங்கலந்து நட்டவனுக்குள்ள இடுக்கண்ணைக் கெடுத்ததாகிய நல்வழித்தென்க, மேலும யான இச்சராசனம எந்தியது, மறத்தோரைவீட்டி அறத்தோரை ஆக்கவுமென்றே எணணுக. எனக்கமைந்த துணைவன் நின்னிலும வலியில் எளியோனாயினும நற்குண நற்செயலுடையோனா யிருத்தலே சாலவமையும. அனனோனால் எத்தகையகாரியத்தையும இனிதாகவும எளிதாகவுமுடிபபேன். ஆகவே அவ்விராவண காதகன் இனிபபடும பாடு நின்பாடெனறு உறுதியாக நமபுக என்று அருளிச்செய்தனன்.

அதனை வினவுற்ற வாலி, ஐய! யான்செய்த அக்கிரமம் இத்துணைதானே, நீ அதனை அக்கிரமமென்று நினைபபது கிரமமல்லவே, அது எங்கள் ஜாதிக்கியல்பு, விலங்குபறவை ஊர்வன ஆதியாய ஜெநதுக்களில் வலியுளளது வலியில்லதை வருத்தி அதனிடத்துள்ள பொருளைபபறித்துச் சுகிபபது யாவரும் அறிந்தததுதானே. இவ்வாறே எங்களைநடக்குமாறு இரணியகருப்ப னியற்றியுள்ளான. இதற்கு மாறாக யாங்கள்

நடப்பதும் நடக்க நீ ஏவுவதும அக்ரமமும் மரபுவழுவும்
ஆம. யாங்கள ஜீவிப்பதும அருமை. நீவிர் அவலம்பித்து
வரும சுருதிகளும இவற்றை அநுசரித்த ஸ்மிருதிகளும கூ
றும எண்வகை மணங்களுள் யாதொனறினுலும யாபபுறுத்
தப்படும இல்வாழக்கை விதிகளும் நற்குண நற்செயலகளும்
குலகோத்திரங்களும் எங்கட்கு கிஞ்சித்தேனும் இல்லையே.
ஆகவே எங்கள்புத்திக் கொத்தவைகளைப் புசிப்பதும் வேற்
றுமையல்வழிப புணர்ச்சிகளை இச்சிப்பதும இயல்பென நீ
உணராமல் வேற்றுமைகொண்டு என்னை விட்டினது நுங்
கள் மாநுட தாமமாமா? இப்போது நீ அறந்திறம்பினையா!
யான் திறம்பிநடந்தேனு! சற்றுயோசித்துப்பார் என்றனன்.
அதற்கு வைதேகி மணுளன், மாயாவிமாததனு! நன்கு கூறி
னை, சமயததுக்கேறற சாதுரியமெடுத் துரைத்தனை. இது
வெகு விநதை. நீயும நினறமபியும முறையே ஆயிரங்கண்
ணன ஆயிரங கிரணனுகிய இரண்டுதேவர்கள் அம்சங்களா
கப் பிறநதுளளீர். நீயோ அரிய பூசனை யியற்றி ஆலமர்கட
வுளமாடடு அருமபெறல்வரமபெற்றுளை. இத்தெய்வத்தைப்
பற்றின இத்துணை நலமபெறலாமென முன்னரே யறிந்து
செய்யும முன்னம விலங்கிற்கு இயல்பான குணமோ? இவ்
வாறு எனககு நீதி கூறும அறிவும அதற்குண்டோ? இல்
லையெனல் நின்சொல்லாலே விளஙகுகின்றதே உருவம்மிரு
கமன்றே வென்பையேல் கஜேநதிரன் விஷயத்தை ஆராய்ந
துபார். எருவைக்கரசு பறவைவடிவுளளவர் அன்றே! செய்
பவன் கருவிநிலஞ்செயல்காலமசெய்பொருளாறுந தருவது
வினையென்றவாறு ஆதயகோடிகள் தத்தம் வினையியலின்
படி தேகாபிமானிகளாகிய கர்த்தத்துவமும் அகமபுறம் ஒற்
றுமைகளாகிய கருவிகளும் நாடுநகரம் காடுமலை முதலிய
இடங்களும நன்மை தீமைகளாகிய செயல்களும் நிறைகு
றைவுகளாகிய ஆயுள்நாளகளும நீதிநெறிகளாகிய செயப்
படு பொருள்களும அறிவு அருள் முதலிய குணப்பண்புக
ளுமுடையனவாய் உதிக்கின்றன. உதிக்கினும் மதிக்கும்
அறிவே சிறபபுடைத்து. எவ்வுருபு எவ்வாறுயிருக்கினுமெ
ன்ன? பொருள் சென்மருங்கினன்றே வேற்றுருவாகும். அவ்
வறிவினும் பகுத்தறிவும பாரமார்த்திக விஷயத்தில் பாடு
பட்டு மோக்ஷசாம்பிராசசியத்தை யடையும் அறிவும் ஒன்

றற் கொன்று விசேஷமாம். பாரமார்த்திக மடைந்த நின் அறிவு பாவமார்க்கமடைவது தகுமா? பக்ஷிராஜனுமனறோ பரதாரசோரனோடு பலவாறு யுத்தமசெய்து தன்னுயிரிழந்தனன் அவன்செய்த வுதவிபோல நீ பிறர்க்கு இதுகாறும செய்யாதிருக்கினும பரதார கமனமாயினும செய்யாதிருக்கின் எத்துணையோ மேமபாடு பெற்றிருபபை. காரகமுடையோன் தீவினையான்முடிவனென்பது திண்ணம, தீவினைக்குறையுடையோன் தனநற்றொழிலையும பூரணஜீவகாலத்தையும காட்டித் தீயபால் (ஊழ்) வினைகளையு மொழிந்து நிற்பன். உலகில் ஆணவாதிகளுற்ற சிலர், தாமசெய்தகுற்றமுற்ற செயல்கள் குற்றமற்றனவே என நிரூபித்தற்கு அநேகநியாயமற்ற சமாதானஙகளைத் தான் பிடித்தமுயலுக்கு மூனறேகாலெனச் சாதிப்பாரபோன்று கூறுவ தியற்கை. அதுபோலவே நீயும் கூறவநதது பெருவியபபே நீசெய்ததை பாரத்தே அவ்விராவணனும செய்தான்போலும். நின் தமபியும நின்போலச் செய்வானென நினையற்க. நின்பாடும தன்மனைவிபிரிநததினு னுளதான துன்பும நிதர்சனமாகக் கண்டனனன்றோ? தேவர்களில் மலரவன், பாகசாதனன், சந்திரன் இவாகள் எத்தொழிலால் இழிவடைநதனா என்பது நீயறியாத தல்லவே. மககளில் தக்கதின்னது தகாததின்னது என அறியாதவர்கள் மாக்களே. அறிநதுநடககின மாக்களேனும் பறவைகளேனும் மனிதர்களும்வானவாகளுமாவா, ஆகவே எவர்கட்கும பெருமையும சிறுமையும் தாங்களியற்றும நற்செயலாலும தீச்செயலாலும் வரும்.

நன்னிலைக்கட்டன் னைநிறுப்பானுந்தன்னை
நிலைகலக்கிக்கீழிடுவானும்—நிலையினும்
மேன்மேலுயாத்துநிறுப்பானுந்தன்னைத்
தலையாகச்செயவானுந்தான்.

இன்னோரன்ன நீதிகளில் நீயறியாதவையில்லை என்று கூறவே வாலி, மனுவமசோற்பவ! நீ கூறியயாவும உண்மையே. ஆயினும சுத்தவீரர்கள் யுத்தகளத்தின்முன் உற்று நின்று அததிரபபிரயோகம செய்வதுபோல நீ செய்யாமல் பறவை மிருகங்களை மறையநின்றெய்யும் மறவர்போலச் செய்த காரணத்தைச் சற்றுப்புகலுதியென அருகில் நின்ற

ஆதிசேஷாமசரான சுமித்திரைச்சிங்கம கேண்மோ. அகல் யாசோரதுச்சவனன் புத்ரா! தமபி மனைவியைக் கற்பழித்த முறையில்லாத நின்விழி முன்னின்றும இகப்புரியவேண்டு மா? நீயே நின்னை விலங்கென்று ஒப்புககொளகின்றமையின் நீ ஒருகால் போருடற்ற வொல்லாதென உயிரமே விச்சை வைத்து ஒடி ஒளிந்தாயேல் ஓடினோனைத் தேடிப்பற்றிச்செ குபபது அறத்திறனல்லாமையும் அன்றி மிகச்சிரமமுமன் றோ. மேலும யானும் நின் அடைக்கலமென்று நீ கைகூப பின், நின்முன்னோனைக்கொன்று கிட்கிந்தையாட்சி நின கைககு விருத்துவேனென்று நின்தம்பிககு அபயமளித்த இவ்வண்ணல் வாக்கியம எவ்வண்ணம நிகழும? நிகழாதாத லின் அவ்வாறியற்றினன். இதனைத் துணிந்துகொள்கவென வுரைத்தனன்

அது கேள்வியுற்ற அமராபதிதனையன் இவ்வாகன் செய்தது அரசாககு விதித்த நால்வகை உபாயங்களுள் ஒன றினிடமாயட ககுவது எஙஙனமாயினும் துஷ்டநிக்ரக சிஷ்ட பரிபாலனம செயவது இறைமகனுககு இன்றியமையா தது. நா அவிஷ்ணுப்ருதிவீபதிஃ என்றிருததலால் இவன விஷ்ணு அமசமே. அதற்குச் சிறிதும ஐயமிலலை புலவாகள் பறபல விகாரஙகள, மரபுவழு, இடைநிலைமயககம, கால வழு போலிமுதலியவைகளைக் கொளளினும இவன் கொள் ளான். நூற்பொருள் வழககொடு வாய்பபககாட்டி ஏற்புழி யறிந்திற கிவ்வகையாமெனத்தகும வகைசெய்த்துந தந திரவுத்தியும்,குலன், அருள், தெய்வங்கொளகை,மேன்மை, கலைபயில்தெளிவு,கட்டுரை, வன்மை,நிலம்மலைநிறைகோல், மலர்நிகர் மாட்சி, உலகியலறிவு, உயாகுணம முதலியவும, தானம, முயற்சி, அளவு, பொருள், வடிவு, சிறபபு, இனம இவைகளுள சிறநத ஈண்டிய அமமுதல்வனென்பது அனை வரும் அறிவர். யானறியாதிருந்தது அஞ்ஞானமே. அறமெ ன்பது ஒழுக்கம் வழக்குத்தண்டம என மூவகைத்து, இவற் றில் இடையது - கடன்கோடல், உபநிதி, கூடிமேமபடல், நல்கியதை நல்காமை, ஒப்பிப்பணிசெய்யாமை, கூலிகொ டாமை, உடையனல்லான் விறறல், விற்றுக்கொடாமை, கொண்டுள்ளமொப்பாமை, கட்டுப்பாடு கடத்தல், நிலவழ

க்கு, மாதராடவர்தருமம், தாயபாகம, வன்செய்கை, சொற்கொடுமை, தண்டக்கொடுமை, சூது, ஒழிபு என்னும பதினெண்வகையது. யான் சுக்ரீவனவிஷயத்திற்கூடி மேம்படாமையும கட்டுபபாடுகெடத்தல் மாதராடவர் தர்மமில்லாமை தாயபாகமகொடாமை வன்செய்கை சொற்கொடுமை இவைகளுடையேனு யிருந்தமையால் கடையதெய்தியது.இச்செயல்களைக்கண்டோா யார்தா மொப்பிபபொறுப்பார்?ஒழுக்கநெறியினும வழக்குநெறியினும வழிஇயினுரை அநநெறி நிறுத்தற் பொருட்டு ஒப்பநாடி அதற்குத்தக ஒறுப்ப தன்றோ தண்டமென்பது. உயிரோடிருந்து என்னைத்தண்டிககினும யான் நல்வழிபபடுவேனல்லேன். இதனை அவன் முன்னரே உணாநது செய்தனன்.ஒருக்காலுமஅறத்திறனழியச்செய்யான். இவனதுமரபுளோர் யாரேனும செய்தனரா? உயாகுடியிறபிறநதோா தம உயிாக்கிறுதியுறினும ஒல்லாவினையுஞற்றுர் நமககியல்பாயுள்ள புல்லறிவினுல் இன்னுச் சொற்கூறி அபசாரபபட்டோம. இவனே உலகிற்குக் காததாவாய் ஆக்கல் அழித்தலாதியடைந்து * அயோத்தியை நீத்து மானிடரை ஒத்துக் கோதண்டமாதியாக உடையகருவிகள்பெற்று உடனிகழும தம்பியோடு இக்கானில் அடைந்து எம்பிக்கு இக்கிட்கிநதையரசின் கொடைநோநதமையின் மற்றைபபகைப்புலந தெறுவானென்பது இபபோது தான் நமக்குக் கரதலாமலகமபோலக் காணபபட்டதுஎனத் தனக்குளளே எண்ணி உறுதிகொண்டு சொல்லலுற்றனன்

சகலஜீவகோடிகட்கும் தாய்போன்று தண்ணருள்புரிந்து தருமம தகுதிசால்புமுதலிய சற்குணஙகளாகி நிற்கின்ற சாவபுருஷசிரேஷ்டனே! முச்சகநிழற் றும முழுமதிககுடையுடைய அச்சுதா! இயல்பினவிகாரமும விகாரத்தியல்பும உயாதிணையிடத்து விரிநதநதொகுகும அஃறிணையிடத் தேயளவளாநின றும அன்னபிறவுமாகாநின்ற ஐயாகிய நீ வேற்றுமையல்வழியாய் நின்றியற்றும் தொழிலும் பண்பும உவமையின்மையும உணராது உமமையில் எரிவாய் நரகில வீழுமாறு உவபபன் மொழிகள்கொண்டு மலேயோடெழுவாய்நதநின் தோள்வலியை யிழித்துக கூறினென், இவ்வி

* அயோத்தி=சகேதநகரம், பரமபதம்.

ளிவோ டெச்சமுற்று முடையேனுயினும இனி இடையில் மரவுரிதழீஇய நின்கோலம என்னிதயம விட்டகலாது. என் செய்கேன் என்செய்கேன!! குமார்க்கமுள்ள என்குரக்குப் புத்தியால் புணரியலில் விகாரபபடடதனுல், மென்மையோர் கட்கு எழுவூயாங்கால் மேலின்முன் வன்மை இடைநிகா வாய் இயல்புறுதல் போலாது, கீழின முன்வன்மை விக றபமாதல்போல என்கீழ்தொழிலால் கிரிசன்பாற்பெற்றவ விமை விகாரமடையக் கெடுதலடைநதேன். காக்கைவிரும புவது வேபபங்கனிபோல ஒருவர்கணிருக்கும நறகுணங்களை விடுத்துக கீழ், கொண்டுபுகல்வ தவாகுற்றம. ஆதலால் யா னும நின்கலியாணகுணஙகளை விடுதது்த் துர்கமுணஙகளைக கறபித்துரைத்தேன ஆகையால்அறியாமையால்யான்செய்த தும.செபபியதுமாகிய பிழைகளை நின்திருவுள்ளத்து வை யாது பொறுததருளக. நாயினுங்கடையராய எஙகள்மாட்டு நினக்குஇயல்பாயுளள விசேஷதர்மங்க ளுள்ளனவாவெண இனிபபாாத்தலொழிக. அநநத க்லேசங்கட்கும ஆநமாயும அருவருப்பாயுமுள்ள அடியேன் ஜனனவியாதியை அறுதத நகனுகின அருமருந்தாயும அடியார் ஆதரிககும் வரத்தை அளிககும வள்ளலாயுமிருககும நீயான் இரநது கூறும விண் ணபபமொன்றைக் கேட்டருளல வேண்டும. என்பாபதேக த்தை நீக்கின அனநதரம புண்ணியதேகத்தைப் பாலிதது அதறகுத்தகக பரமஞானதனைதத தோறறுவித்த நின்பாண த்தின் மகிமையை யான் எனனெறு பரவுவேன், அதுவே தெய்வம. இக்காலததினுற் செய்தநன்றிககுக் கடைபபட்ட யான் என்னகைமமாறியற்றுவன்.மூவர்நீ, முதல்வன்நீ, முற் றுமநீ, மற்றுமநீ, பாவமநீ, தருமமநீ, பகையுமநீ, உறவும நீ, ஆதலின் பூவின்வண்ணமும அதன் மணமுமபோல தே வமனுஷ்ய திரியக்குத் தாவரங்களுேம இருதுககளும அவற் றின்பலமும ஆக வியாபித்துத் திரிகாலஙகளிலும உள்ளவ னுவாயென்று சிரியோர் செபபியுளர். ஐமபாலாய நிற்கும நீ ஆண்பாலுருக்கொண்டு ஐம்பாலோதியின்பொருட்டு எம பால் அணுகி அம்பால் எனனை யெய்தது முன்பால் யான செய்த இன்பாம தவமேயன்றி வேறில்லை ஆகவே இனி எனக்குப்பரமபதம் அருமையாமா?தருமரூபங்கண்டவனுக் குப பாபம தோற்றுமா? இப்பாவம தொலையவும புண்ணி

யம் தோன்றவும் என்அநுசன்செய்த வுதவிக்கு ஓர் அள வினறு. அவன புண்ணியமருநதைககொண்டு பிடிகக அபபொருபபிடை இதுகாறும புககிருநதனன போலும. சகோதர வாஞ்சையால முன்னவனை முனனர் நன்குஅநுபவித்தல நனனலமென்றெண்ணி தான கண்ட அககணமே கொண்டு வநது பகைவழிததாகவாயினும யான் அவாகமனேகோசரமும நிதயநிரதிசயமுமான வீட்டரசு அடையவிடுத்துத் தான் சிறநிலைபத்தைத் தருவதாகிய வெறறாசெய்தினன். நின்மரபுளோர சத்தியமே தாயாகவும, ஞானமே தநதையாகவும, தருமமே சகோதராாகளாகவும, தயையே தோழர்களாகவும, சாநதியே தாரமாகவும, க்ஷமையே தனையாகளாகவும எண்ணி யிருநதமைக்கேற்க நீ தன ஜாதிக்கியல்பாகப் பூவினமதுவை மாநதிபபுநதிமயங்கி ஒருகால் எமபிவினைக்குத்துன்பமியற்றி இருநதுழியும இவவமபெனனும அநதசனை அவன்மேல் உநதுதலொழிக. இன்னும் ஒன்று நின்பால் இரபபதுளது. அதாவது இவன்தன் மூததோனைககொல்வித்த மூாககசண்டாளன், இன்னேன்முகததில் விழிபபதும தகுதியன்று என எண்ணி எமபியை உமபிமாாகள் இகழவரேல அதற்குத்தக்கவாறு நியாயம் கூறித்தடுகக என்பதே. ஏனெனில் முன்முனே நின்குறைகளை முடிப்பேனென அவன் மாட்டுறுதி மொழிபகர்ந்துளாயன்றே. மேற்கூறியஞானமுதலிய சட்குணஙகட்கும நீ தானமாயிருப்பினும என் பிரியானது இவ்வாறுரைக்கத்தூண்டியது. அச்சோ! இன்னுமொன்று இவவேழைமனம எண்ணுகினறது; அது அறபமசகம பக்ஷிராஜனுககு உதவிபுரிய உன்னுவதுபோன்றது. அவ்வெண்ணம மறவன்கையிலகபபட்ட மாறசாலம பாற்சாகரமுற்றும் பருகவெண்ணியது போனறு பயனற்றது அது ஆனதெனினும அதனைசசொல்லியாயினும் ஆசைதீர்கின்றேனா எனகினறது. சததியமே வெலலும மித்தையல்லவென்றிருககும நினமனை மாட்சிமை வினையஞ்செய்து கவாநதுசென்ற மகாகாதககனுகிய பாதகவரக்கனை என்மேதகுவாலிற கட்டிக்கொணாகது நீ தகபோகக நினறிருமுன் நிறுத்தறகியலாமற் போயிறறே என்னும எண்ணமேஅது. அதற்கும வழியில்லையே. அன்னேனைச்செயித்த முன்னேவில் இனி உன்னேடு போாபுரியேன். இது முதல் சகோதர

வொருமை வாய்ந்திருப்பேனென முனோர்முன்னர்ச் சூளு
ரைத்து அபயமளித்தாள்ளேன் என்செய்கேன். நானிருந்தும்
பயனில்லை. இவற்றையெல்லாம் முன்னரறிந்தே என்மாட்டி
வ்வாறு புரிந்தாய்போலும். சாவாந்தர்யாமியும் சாவசத்தி
யுள்ளவனுமானை நீ என்முன்வந்து போர்புரியின் நின் ஒல்லா
உரத்தின்முன் என தள்ளாவரமனைத்தும் சாய்ந்தொளிக
கும். அங்ஙனமொளிந்தால் அவை இழுக்கடையுமே என
எண்ணியே நீமறைந்து வினைசெய்ததென இப்போது நினைக்
கின்றேன். உலகமெல்லாம ஒளிபரப்பும் உடுபதியும் ஒண்க
திர்ப்பரிதிமுன் தன்னொளிமழுங்குமன்றோ. நீ மாயையாகிய
மறைபபிலடங்கினையெனினும ஞானிகட்குத தோன்றியும
அல்லவாகடகுத்தோன்றுமலு நிற்பது இயல்பு. கடந்தகாரி
யத்தைபபற்றிக் கருதுவதிற்பயனின்று. அததசகண்டனைப்
பிணித்துக்கொணர்தலாகிய ஓர் தொழிலொழிய மற்றியாது
செய்ய ஏவினும இவ்வநுமன் இயற்றவல்லன். இவனை நின்
கரத்துளதறுவென நினைதி. என் அநுசனை நின்னநுசனாக
எண்ணுக. ஒப்பற்ற இத்துணைவரன்னவர் இபபாலெங்குமி
லர். இவர்களைக்கொண்டு தவருடன் வந்த தையலைநாடிக
கொளக என்று கூறித் தன் பாங்கர் இருந்த தமபியை மார
போடு தழுவிக் கூறலுற்றனன்.

ஐய! யான் உரைக்கும உறுதிமொழிகளை உய்த்துணர்
ந்துகொளக. என்னிலைமையைபபற்றி இனியாதும எண்ணி
வருந்தற்க. மந்திராதீனமான மறைகளும அவற்றிற்கு அதீ
னமான அருந்தவர்களும அயனும மறைற அயலவரும அரி
யசாஸ்திரங்களும சொல்லபபடுவதாகிய தூயபரமபொரு
ளே இவ்வுலகிலவதரித்து இராமனெனனும பெயரினனாய்
வில்லொன்றேந்தி அதனால் தருமமார்க்கத்தை நிலைநிறுத்த
வந்தவனென்று கிஞ்சித்தும் ஐயமின்றி எண்ணுக. பூமியி
லொட்டிக்கொண்டு வியாப்தமானவும சூக்ஷ்மமான எறும்பு
முதலானவும ஓர் உபாயாந்தரமில்லாமலே நல்லபிரதேச
மான திருவயோத்தியிலே ராமகுணாநுபவம் பண்ணிக்கொ
ண்டு பரீதியோடே வாழுகின்றன. அசசராசரங்கள் எல்லா
வற்றையும், சதுர்முகனுடைய நியாமகத்வமும சேதநனு
டைய காமவசியத்தையுமபோக்கித் தான் அங்கீகரித்துத்

தன் விசிலேஷமே துக்கமாய் தன் சம்சிலேஷமே சுகமாயிருக்கிற நல்ல சுபாவத்தை அடைவித்த இவ்விராமபிரானை யல்லால் கற்பார் மற்றும் கற்பரோ? அங்ஙனங்கற்றுத் திரிகரணசுத்தியா யன்பு செய்பவர்கட்கேயன்றிச் சத்ருக்களுக்கும் வத்ஸலராய் சகலவித பந்துவென்று சொல்லப்படுகிற இச்சக்கரவர்த்தித் திருமகனார்க்கன்றி ஒருவர் ஆளாவரோ? இவனது கல்யாணகுணங்களையன்றி யந்யகுணங்களை ஒருவர் கேட்பாரோ? புருஷார்த்தோபாயங்களைச் சிந்திக்கின் இவனது திருவடிகளையே சிந்திப்பர். ஆகவே இவனே பொருந்தின்ற தலைமையனென்க அதற்கு என்னைக் கோறல்செய்ததே போதுமான கரியெனத் துணிந்து வேறுகாரணம் வேண்டுவதின்று இரண்யன் இரண்யாக்ஷன் காகாசுரன் விராதன் கவந்தன் ஆதியர் இவற்குத் தீமைபுரியினும் வானுயர் நிலையை யெய்தினரன்றே. என்றும் இணையடியை யிறைஞ்சிக் குற்றேவல்புரிபவர்கள் பெறும் சீர்மையை யாரால் அளவிட்டுக் கூறலாம், இவற்குப் பகையுடைமை பத்தியுடைமை ஆகிய இவ்விருவகையு மல்லாதிருக்க எனவிதியினார் எனக்குக் கூட்டுவித்த நன்மைக்குக் காரணம் யாதென்று யோசிக்கின் யாதொன்றும் காணப்படவில்லை. ஆயினும் நீ அன்னாரோடு நட்புக்கொண்டமையே நான் அவற்குப் பகைஞனாயினேனெனச் சிந்திக்கின்றது. சிந்திக்கினும் முத்தி சித்திப்பதற்குச் சிறிதும் ஐயமின்று. என்போல் வலிந்து சித்திபெறுமல் நீ பணிந்து அவற்கு ஏவல்புரிந்து ஒருமைப் பாடுற்று மும்மையுலகினும் உயர்ந்த இருமைப்பயனும் அடைதி. இதனினும் செய்யற்பாலதொன்று வேறின்று. இன்றோடு மதவியற் குரக்குச்செயலை மாறுக. அவன் ஈந்த பதவியலை நினைந்து அவற்கு ஆபத்துற்றவிடத்து நின் உயிருடன் மெய்யையும் உடன்படுத்து. நன்குஎனினும் தீதெனினும் அவன்பணித்த யாவும் திருத்திபெற வுஞற்றிப் பிறவிக்கடல் கடந்துய்தி. அகலாது அணுகாது தீக்காய்வார் போல் அவனோடு சேர்ந்தொழுகுக. மிகநீங்கினால் பயன்கொடாமல் மிகநெருங்கினால் அவமதிபற்றிவருத்தும் வேந்தர்க்கு மிகநீங்கினால் குளிர்நீங்காமல் மிகநெருங்கினால் சுடும் தீ அவர்கட்கு உபமானமாகக் கூறப்பட்டதென்க. அன்னோர்

பால் செவிச்சொல்லும் சேர்ந்தகையும் அவித்தொழுகல் வெண்டும அவர்களால் நாம் நன்குமதிக்கப்பட்டோமென அவர்கள் விரும்பாதவைகளைச் செய்யற்க. க ருமைநோக்கி அவர்களது குறிப்புவினைகளை நீ தெரிகிலெவினையெனத்தேர்ந்தபின் முறைமையாகவிரைந்து செய்க. சிறிதுகுற்றஞ்செய்யினும அதனைப் பெரிதாகநினைந்து சீறுவர் பொறுப்பரெனக் கனவிலுமெண்ணற்க. அரசனருகிருந்து காரியஞ்செய்கை சாணைபிடித்தகத்தியை நக்குதலும, சிங்கத்தைத்தழுவுதலும், விஷசர்ப்பத்தின்வாயில் முத்தமிடுதலும் ஒக்கும. மிகுமகிழ்ச்சியால்வரும மறதி அளவுகடந்த கோபத்தினும் குற்றமதரும; ஆதலின் நீ அரசியற்பாரமபூரித்து அயர்ந்து அவனைமறவற்ர. பருந்தொடுநிழல் சென்றதுபோல அவன் பாதபங்கயம நீங்காதுவாழுக என்னும இத்தொடக்கத்த புத்திகள் புகட்டி அவனை இராகவன்பாற்செலுத்தி ஆபத்பாந்தவா அநாதரக்ஷகா இவனும இவனது புத்ரமித்ரகளத்ராதிகளும் நின்னடைக்கலமாகுக என இரந்துகூறி இறைஞ்சி, சுக்ரீவ நின அரிய கானமுனையைச் சற்று வருவியென்றனன்.

## ௬-வது அத்தியாயம்.

அவ்வாறே அவனும அழைப்பிக்கவே சொற்பணத்தினும் தனமனதால் துக்கமுகமுடையோரைக் கண்டறியாதவனும எண்ணிரண்டு கலைகளுமநிறைந்த தண்ணியசந்திரன் போன்ற தேககாந்தியுடையவனுமான அங்கதப்பெயரிய சிங்கக்குருளையன்னன் ஓடிவந்து புஷ்பவனைச் * சக்கரமநீங்கி இரத்தவனைச் சக்காரத்திற்கிடக்கும தன் அத்தனைக்கண்ணுற்றுக் கண்ணீர்ப்பிரவாகமும செந்நீர்ப்பிரவாகமும் கலந்தொன்றுமாறு தந்தை தோளோடு தன்றோள்பொருந்தத் தொல்லுலகிற்கிடந்த வெள்ளிய இந்துமண்டலத்தின்மேல் வெள்ளியொன்று வந்து வீழ்ந்ததுபோல விழுந்து எந்தாய்! எந்தாய்! மாயாவி துந்துபியரை மாய்த்த மாயாவயமுடைய வேந்தே! இவ்வட்டவாரிசூழும வளாகத்தில் யார்க்கும மனத்தாலும் செய்கையாலும வல்வினையாதும செய்தறியாத மகிமையனே! மறலிக்கும் மறலியாய நின்னை வவ்வ அமமற

* சக்கரம்=மலை, கடல்.

லியும் வந்தனனோ? ஆ! ஆ! அவன் வலியை அடக்கும் மறம் எவரிடமுளது? எட்டுத்திசையும் தாங்கும் அஷ்டகஜங்கட்கும் தறையில் முளையடித்ததுபோல நெஞ்சு படபடென்றடித்துக்கொள்ளுமாறு முட்டுவித்து அவற்றின் மருப்புகளை மாறுபால் முறித்து அவமதித்த ஐயிருதலையனுக்கும் நின் வாலினிலைமையை நினைக்குந்தோறும் பறையடித்ததுபோன்று தோன்றும் மனப்பறைப்பு இன்றோடு தொலைந்ததே. பத்துத்தலைச்சென்று வந்தது இதோபோனென யான் குழவியாயிருந்த காலையிலெனக்கு வேடிக்கையாகப் பராக்குக்காட்ட அவனைக் கட்டிக்கொணர்ந்த செய்தி எனக்கு ஞாபகமில்லாதிருக்கினும் ஏனையோரும் மறந்துபோயினரோ? இவ்விநோதம் இனியாவர் இயற்றுவரோ? அப்பாதகன்செய்த தீங்கினாலன்றோ நினக்கும் இவ்வாறு நேர்ந்தது. ஒண்வளையும் சீரிய ஆழியசலமும் ஒழிந்த பூதரங்களும் இன்றோடு நின் அடிச்சுவடொழிந்தன. மந்தரங்காலும் வாசுகியாலும் மதிமுதலியவற்றாலும் வாரிதியை மதித்து வானோர்க்கமுதம் வழங்கவேண்டின் வல்லுநர் இனியாவர்வருவர்? அந்தோ இதுகாறும் நின வள்ளன்மையால் பிழைத்திருந்த அவ்விபுதர்கட்கு வாதை நேர்ந்ததே. பாவிபாகலாது பாதுகாத்தலையன்றி வேறெதையும் பதறிப்புரிந்தறியாத நினக்கும் இப்பாதைவரலாமோ? பரிதாபம்! பரிதாபம்! பாழுமனம் பதைக்கின்றதே! என் செய்வேன் என்பப் பரிந்திரங்கிப் பிரலாபித்தனன்.

அது வினவுற்றவாலி அகம்புழுங்கி முகம்வாடி அனலிற்பட்ட மெழுகுபோலுருகி அவனை ஆலிங்கனஞ்செய்து என் அருமந்தமைந்த! நீ இனி அயர்தலொழிக. முன்னையான் செய்த நல்வினைப்பயனே இன்னவாறமைந்ததென்னத் துணிக. இச்சர்வலோக சரண்யனால் எனக்குத் தீங்குசம்பவித்ததென்றெண்ணுவது தவறு, சர்வாந்தரியாமியும் சர்வசக்தியுள்ளவனும் உள்ளும்புறம்பும் ஒத்து நடப்பவனுமான சாக்ஷாத் ஸ்ரீமந்நாராயணனே இவ்வவனிமாது செய்த அருந்தவத்தால் இராமனாக அவதரித்துத் தன்பாதபத்மங்கள் படிய நடந்து நம்மனோர்க்குப் பிறப்புகுணம் அறிவுஎன்பனவற்றால் உயிர்கள் எய்தும்பெருமைக்கும் மற்றைச்சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக்கல்லெனக்காட்டி எனக்கும் வீட்டுலக

மருளினன். பேறிளமை யின்பம் பிணி மூப்புச் சாக்காடோ டாறுங் கருவிலமைப்பு என்றவாறு மூன்றுலகத்தவர்க்கும் மரணம் மூலத்திலேயே யமைந்துகிடந்தது. பிறப்பும் அன்ன தகைத்து. இவ்விரண்டும் ஒருவன் உறங்குவதும் உறங்கிவி ழிப்பதும்போல உயிர்க்கு இயல்பாயுள்ளன. இப்பிறப்பிற்கு முதற்காரணமாயுள்ள நமது அவிச்சைகெட எல்லாப்பொ ருள்களினும் சிறந்ததாய வீட்டிற்கு நிமித்தகாரணனும், தோ ற்றக் கேடுகளின்மையின் நித்தனும், நோன்மையாற்றன்னை யொன்றும் கலத்தலின்மையின் தூயனுமாகி எல்லாப்பொ ருள்களினும் கலந்து நின்று விகாரமின்றி என்ஞான்றும் ஒருதன்மையனுமான அம்மெய்ப்பொருளே, தனுந்தாங்கிக் கண்கூடாக வந்ததென்று ஐயந்திரிபறநினைதி. இதுவே நின க்கு உபாயமெனப்பற்றுக. இனியானுனக்கு உறுதிசொல்ல வேண்டுவதொன்றுமின்று. இன்றோடு நின்பாலமையும் என் னுயிர்க் கிறுதிசெய்தானென்றும் துவேஷமும் ஒழிந்து அவ னையே சரணாகதரக்ஷகனென்று ஸ்திரபுத்திபண்ணி அவனுங் கமாதொடங்கிய காலத்து உடன்று நினதுயிர்க்குறுதிதேடி அவன் சரண்சுமந்துவாழுக நின்சிறிய தந்தைக்குச்செய்யும் வழிபாட்டிற் சிறிதும் வழுவற்க எனப் பலவாறு நீதிகளபுக ட்டி மீண்டும் அவனை மார்பிறுகப்புல்லி, அஞ்ஞானிகட் ககப் படாத மெய்ஞ்ஞானரூப! இவ்விளைஞன் நிருதராகிய பஞ் சுப்பொதிக்கு நெருப்பு நெருப்பை நிகர்த்த நிர்மலனே, இந்த கையை இவனை இதோ நின்கையில் ஒப்பிக்கின்றேன், கைக் கொள் எனக்காட்டும்போது கண்ணியயாவர்க்கும் களைகணா கிய காகுத்தன், தன் பொன்னுடை வாளையெடுத்து இதனை நீ பெற்றுக்கொள்கவென அவ்வங்கதனுழை யீந்தருளினான். அக்கணமே வாலி தான் பிடித்திருந்த கணையைவிடுக்கவே அது அவன்மார்பை ஊடுருவிச்சென்று ஆகலியின் மூழ்கி ஆதிமூலனது வெரிந் அமைந்த ஆவம்புக்கது. ஆகண்டலி யும் சுரரறிவருநிலையாயமாகப்புக்கனன், அதுகண்ணுற்ற வி ண்ணவரும் மண்ணவரும் மற்றையரும் கௌசல்யா புத்ர ரத்னத்தை வாழ்த்தி வணங்கினார்கள்.

அக்காலை அவாப்தசமஸ்தகாமனான தாசரதியும் பரி புத்ரனது கையைப்பற்றிக்கொண்டு அங்கதனும் அதாசனு

பின்னேருடா ஓர்குன்றின் * மாடணுகினன். தன்கண்ணுங்க
ருத்துமொத்த கணவன் இறந்தசெய்தி கேட்டவுடன் கன்னி
கைகளைவரில் ஒருத்தியான தாரையானவள் ஓடிவந்து வா
லிமேல்விழுந்து இரத்தவாரியில் புரிகுழல் சிவப்பேறப் புர
ண்டு வேய்ங்குழல்யாழ் முதலிய இசைக்கருவிகளும்தோற்க
ஓங்கியகுரல்விட்டு அரசே! என்ஆருயிரே! இதுகாறும் துயர்
க்கடல் காணாத யான் இன்று காணக்கடவேனோ? என் உயி
ராயிருந்த நீ இன்றுசெல்ல, உடல்ஆகிய நான் இங்கிருக்கலா
மோ? சாகாதிருக்கத் தேவர்கட்கும் மருந்தீந்த நீ சாகநேர
லாமோ? நின்னைக்கொண்டுபோன நமனும் அத்தேவர்களில்
ஒருவனாகையால் அவனும் செய்ந்நன்றி மறந்தனனோ? சிவ
பெருமானைப் பூசிக்கும் செவ்வியணுகியதே. இத்துணைக்கா
லம் உறங்கி நீடித்திருப்பது நீதியா? புஷ்பசயனத்தை விடு
த்துப் புழுதியிற் படுத்திருப்பையோ? இதுகாறும் கலுழாத
நீ இன்று கரைவதன் காரணமென்னையென என்னைக்கேட்டி
லையே. யான்செய்த குற்றம்யாது? என்னை நீஎன்னுயிரென்று
கூறினையே அதுபொய்யோ? அது மெய்யாயின் அப்பொய்
யிலாதவன் எய்த அம்பு என்னையும் கொன்றிருக்குமே. இவ்
வமையத்தில் தேவர்கள் நீசெய்த உபகாரத்தின் பொருட்டு
நின்மேல் தேமலர்தூய் எதிர்கொண்டு அழைத்து மரியாதை
புரிகின்றனரோ? ஊழிகாலமும் காணும்ஆயுளும் மேருவை
யும் கரத்தால்நெரித்து ஊதும்வலியுமுள்ள நின்னை ஓர்வாளி
கொன்றதென்னின் இது தேவர்கள்செய்த மாயமோ? அஃ
தன்றெனின் வேறுவாலியோ விளிந்துளன்? மறைந்து நின்
றெய்தவன் நின்முன் இரந்துநிற்கின் அமுதும், அமுதிற்பிறந்
தவளுமன்றி அகிலமுற்றும் அளிப்பையே. இன்னவாறு நட
க்குமென முன்னமே யான்சொன்னதைப் பின்னமாக்கிநின்
பின்னவனோடு யுத்தசன்னதங் கொண்டுவந்து இற்றநின்னை
எற்றைக்குக்காண்பேன்? மகனே அங்கதா! அண்ணனோடு
தம்பி போரிட்டமையால் நம்செல்வம்யாவும் அழிந்தமை
யைக் கண்டிலையோ! பெருமையுடையார் பிறர்மானத்தை
யேகூறி அவமானத்தை மறையாநிற்பர் என்பதையும் பெரு

---

* இதற்குப் ப்ரச்ரவணமெனப் பெயர்கூறுவர். இதிலே தான் ராமலக்ஷ்மணர்கள் நான்குமாதம் வசித்தனர்.

மைசிறுமைகட்கும் உரைகல் தாந்தாம செய்யும் கருமமே பிறிதில்லையென்பதும் அறிந்த அவ்வரசமைந்தன், இவ்வாறியற்றின் யாம செய்யத்தக்கதென் எனபபலவாறு கூறிட் புலமபி மூர்ச்சித்தனள். அஙஙனம் உணர்வொடுங்கினவள் ஒருவாறுணர்ந்து நிற்கையில் ஆஞ்சநேயர்கண்டு சிலபெண்களைக்கொண்டு அவளை அநதப்புரஞ் சேர்ப்பித்து அங்கதனைக் கொண்டு காலஞ்சென்றவாலிக்குச செயறபாலதாய தகனசமுஸ்காரமுதலிய நடத்தித் தாரகவாச்சியன் மாட்டுச்சார்ந்து நடநதவெல்லாம உரைததனன்.

அபபோது நெருநல்உளளா னொருவனின்று இல்லையென்னுமபடியன்றி; இன்றுகாலையுள்ளவனும மாலையிலிலனுமாறு இமமாலையிலிலனுயினனே! இவவுலகிய விருந்தவாறு என்னே என்னேயென ஏக்குற்று இறநத அன்னோன்முகமபோலத் தன்வதனம வொளிகுன்றிப் * பனிககடல் மூழ்கினவன்போலச் சூரியன்மறைநதான். மறைநதவன் மீண்டு தன மரபிலுதித்த மன்னவன் மைநதன் மைதிலியின் பிரிவால வருநதுதறகேதுவான கஙகுற்கடலைக் கடக்கவும் மகனுகிய சுக்ரீவன மகுடமபொறுததற்கேதுவாய ராஜலக்ஷ்மியைபபெறவும கதிர்களாய ஆயிரஙகரஙகொண்டு அமபுயமலரின கதவங்களைத் திறநகவநதவன்போலத் தோன்றினன். அபபோது தமபிக்குத தனியரசாட்சிதநத தாசரதி, இலககுவனைநோககி ஐய! நினகையால் சுக்ரீவனுக்கு இன்று மௌலிபுனைநதுவருக என ஏவ, அவனும ஒமென ஒருப்பட்டு வாதாத்மஜனைக்கொண்டு மஙகலப்பொருள்களும மங்கலதீர்த்தஙகளும கொணருவித்து மறையோராசியும வானவாதூவும புஷ்பவருஷமும மருவ மறைவிதிவழாது மார்த்தாண்ட புத்திரனுக்கு மார்த்தாண்ட ஜோதிமயமான மணிமகுடம சூட்டினன். அஙஙனம புனையபபெற்ற மகாராஜன் மநதிரசசுற்றத்தவரோடு மன்னவர்பெருமானுழைவந்து மலரககழல் வணங்கிநிற்க வாய்மைதவறுதவள்ளல், அவனை மார்புறத்தழுவி ஐய! இநநாள்வரையில் நின் முன்னோனால் முனியபபட்டு அரசியலென்னும் அசுவத்தைநடத்தும் அமைதியைப பெரும்பாலும அறியாதிருநதனை என நினைக்கின்

* பனி—துன்பம், குளிர்ச்சி.

றேன். இனியேனும் முன்செல்லினும் பின்செல்லினும்
ஞாபகந்தரும் அவ்வசுவத்தை நிகர்நற்குண நற்செய்கைக
ளென்னும் கலினத்தாலும் அங்கவியலென்னும் சம்மட்டியா
லும் வழிபியலென்னும் பருமமுதலியவற்றாலும் நடத்தின்
நன்மைபயக்கும். அங்ஙனம் நடத்தாதொழியின் இருபாலும்
துன்பம்விளையும். மலைதலையுலகிற் குயிரெனச்சிறந்து உல
கபாலருருவாய் உலகங்காத்தலின் மன்னனுக்கு இறையெ
ன்றும் பெயரிடப்பட்டது. அவன் அமைச்சு, நாடு, அரண்,
பொருள், படை, நட்பென்னும் ஆறுமுடையனாய், முறைவே
ண்டி வந்தோர்க்கும் குறைவேண்டினோர்க்கும் காண்டற்கெளிய
னாய், யாவர்மாட்டும் கடுஞ்சொல் அல்லனுமாய் மதிக்கப்பட்
டுத்தன காரியங்களில் விரைவுடைமையும், அவற்றை யறி
தற்கேற்ற கல்விகேள்வி ஆண்மைகளுடைமையும், காமம்,
வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதமென்னும்
அறுவகைக் குற்றங்களைக் கடிதலும் நெறிவிலக்கி, நன்
னெறிச்செலுத்தி, மானிடர் தெய்வக்குற்றங்கள் வாராமற் காக்
கற்குரிய பேரறிவுடையாரைத் துணைக்கோடலும் இன்றிய
மையாதனவாய்க் கொள்ளல்வேண்டும். மேலும் நல்லதன
ாலும் தீயதன்றிமையு மில்லெனப்போரும் விடாரும் ஆராத
ரும் நட்டாரும் உள்ளிட்ட குழுக்களைச் சேராது கொடுத்தல்,
இன்சொற் சொல்லல், வேறுபடுத்தல், ஒறுத்தல் ஆகிய உபா
யங்களால், நால்வகைவலிகளோடு காலம் இடங்களை யறிந்து
தெளிந்து வினையாடிக் கிளைத்தழீஇ உரு திரு எழுபு முதலிய
வற்றால் மகிழ்ந்து தற்காத்தலினும் பகையழித்தல் முதலிய
காரியங்களினும் சோர்தலடையாது செங்கோன்மையினின்
றும் வழுவாமல் குடிகளோம்புவதும் பகுதியளிப்பதும் தான
ஞ்செய்வதும் ஆய தொழில்களொழிந்து தன்னொடு பயின்று
ரைசகாணின அவர் கூறியன மறுக்காது பகைமுதலிய மூவா
மாட்டு நிகழ்ந்தனவழிதற்கு ஒற்றரையாண்டு மனம் மெலிந்
தின்றி வினைசெய்தற்கட் கிளைசிகொண்டு சோர்புதலின்றி
இடைவிடாத முயற்சிபூண்டு தெய்வம்பொருளின்மை மெய்
வருத்த மிவைகளால் தனக்கு இடுக்கண்வந்துழி அதற்கு ம
னம் கலங்காமல் அரசாட்சிபுரியவேண்டுவது. ஆகையால் அரி
யணைகொண்ட நின்னரசு எண்ணியஎண்ணியாங்கு நின் ஒருவ

னுக்கே இன்பமனுபவித்தற் குரியதென்று நாணிக்குப்பாராட்டாமல் யார்க்கும் இன்புமுற நீதிசெலுத்தி ஆளுக. இப்போது சிங்கத்தில் சூரியன் பிரவேசமாயினமையின் வானரங்களும் மலைமுழைகளில் வதிந்துறங்குங்காலம் இதுவாயிற்று; ஆதலால் நீ இந்நான்குமதியும் நின்னிருப்பையடைந்து நின்மகனுக்கு இளவரசு ஈந்து சுகித்துமீளுக. அவனைச் சிறியோனென்னமதித்து அவமதிசெய்யற்க. தன்மையிற் சிறிய குறிய கூனியென்று சிறுமையொன்று யானியற்றினமையால் அவள் எனக்குச்செய்த கொடுமை எவ்வாறு செய்தது? கண்டாயன்றே. மங்கையராலேயே மனிதர்கட்கு மரணம்வருவதென்பதை வாலியிறந்ததும் யாங்களடைந்த அல்லலும்பழியும் கரதலாமலகம்போலக் காட்டும். மற்றும் போகத்தற்குரியதும் அறமும் ஆக்கற்குரியதும் ஆமென ஊறிக்கொண்டு நின் முன்னோனைப்பற்றி இனி நீ இரங்காது இத்தராதலத்திற்குத் தாய்போலிருந்து தாங்குதி, போதினை என்றவே சுக்கிரீவன் அந்த! எமக்கா குரவிருந்தையெனனும்பழி சொல்லாற் கூறப்படுவதொன்றேயன்றி நன்னலத்திற் பொன்னகரினும் சிறாததென்பது யாவரும் அறிந்தவிஷயம். ஆதலால் இவ்விருதிவ்வனிருதிகாறும் நீவிரிவண் வீற்றிருந்தருளின அது எமது செய்த தவத்தின்பயனும் நமக்கு யாங்களியற்றும் சிறிய பணியால் இனிமையுறும். இதுமுதல் அரசாளும் நம்மைப் பிரிந்து யாங்களடையும் இன்பம்பெருந்தக்க துன்பத்தோடொக்கும் எனக்கூறி வணங்கினன். அதுகேட்டருளிய கோசலாபெருமான், குறுமுறுவல்செய்து மற்கடேச! வேர்தரிருக்கை யெம்மையொத்த விரதியர்கட்கு விருப்பமுடையதாமா? விழைந்திருப்பினும் எம்மோடளைந்து போற்றுதலிலேயே நம் பொழுதியாவும் போதரும். போதவேநீயடைந்த புத்தரசாட்சியின் கண்ணுள்ள காரியங்களை நடத்தற்குரிய காலம் எங்குளது? மேலும் யான் கூறிவந்தது எழிரண்டாண்டு எரிவனத் திருத்தலென்பதல்லவா? இக்காடுறைவாழ்க்கையை விடுத்து என் இணைவிழியையொத்த துணைவி தூர்த்தனொருவனுழைச்சென்று துயர்கூர்ந்திருக்க யான் ஓர்துணைவனிடத்திருந்து சுகிப்பது தர்மமா? உலகம் சம்மதிக்குமா? இதனால்வரும் பழி இவ்வுலகத்து இறுதிக்காலத்திலும் நீங்கா

அநதோ என்வில்லுக்கு வேலைகிடைத்தும் அதனை அதற்கிடாமலும் முனிவர்களிட்டவேலைகளை யியற்றாமலும இருக்கின்றேன். இவையன்றி இன்னும சிலதர்மங்கள யான்செய்ய வேண்டுவனவுள. இவற்றால்பல அதர்மங்களும பாறவேண்டுவன. ஆகையால் என்வேண்டுகோளின்படி நின்சேனசமூகங்களை இநநான்கு திங்களிற் சேர்த்துக்கொண்டு அவற்றின் இறுதியில் வநது என்னிடமசேரக என்று உரைககவே உருமைமணாளன் அதனை மறுத்துப்பேச அஞ்சிகுறிபபறிநதொழுகலே முதுக்குறைவென வெண்ணித் தன்கண்களில் நீர் வடிய வணங்கி மனதை வரதன்பாலவைத்து மமமரோடு சென்று தன்மலையிடம்புக்கனன்.

பின்னேநின்ற வாலிசேய் முன்னேவந்து பொன்னடி வணங்க, மன்னர்பெருமான்மகன் கண்ணருளோட்டி அஙகத! நீ சீலமுதலியவற்றிற்கு அங்கமாயிருக்கின்றமையின் வேறு யான்விளமபுவதின்று நின்சிறியதநதையைப பெரிய தந்தையாக நினைந்து அவன் ஏவலிற்றிறமபாது நிற்றியென்றுவற்புறுத்திப பலநியாயஙகளைக் கூறி விடைகொடுக்க அவனும் சென்றனன், பக்கதநில்நின்ற மெய்க்கொற்ற மாருதியைநோக்கிக் கேசரிபுத்ர! நீயும அவன்பின் படர்தறகுரியையன்றோவென, அநுமன் கருணாநிதி! அடியேன் பிரமசரிய ஆச்ரமத்தை யடைந்துள்ளேனென்பது நுமது திருவுளளத்திற்றோன்றி யிருககின்றதே ஆதலால் யானு மினி நாட்டில் உறைவதெற்றிற்கு? அங்ஙனமிருக்க தாபதாகளாய நுங்கட்குக் குற்றேவல்செய்ய நினைக்கின்றது என்மனம என வணங்கி உரைக்க, வள்ளல் ஐய! அரசனுக்கு முதலங்கம அமைச்சு. காவற் சாகாடுகைத்தற்கண் அவ்வரசர்க்கிணையாய அவ்வமைச்சு, வினை செய்யுங்கால் அதற்குவேண்டும கருவிகளும காலமும் அது செய்யுமாறும் அவ்வாற்றிற் செய்யபபடும் அவ்வரியவினைதானும்வாய்பப எண்ண வல்லவனாவான். தன் அரசன் சுருங்கியகாலத்தும பெருகியகாலத்தும இடைநிகராய காலத்தும் அவனாற் செய்யபபடும அறங்களையறிந்து தனக்கேற்ற கல்வியானிறைந்த சொல்லையுடையனாய் வினைசெய்யுந் திறங்களையறிநது அவனுக்குத் துணையாவதுமன்றி சொல்வன்மை வினைத்தூய்மை திட்பம

செயல்வகை தூயமன்னரைச சேர்ந்தொழுகல் குறிப்பறி தல் அவையறிதல் அவையஞ்சாமை முதலியவைகளுமுடை. யவனுவான். இக்கூறியமுற்றும அமைந்த நீ புத்ரசெய்திய நாயகனுக்குத் துணையாயிருத்தல், இனறியமையாததன்றே. ஒருகால் அவன்மாட்டுத்தீமைவிளையின் அதனை இடித்து ரைத்தகற்றும வலியுடையோர நின்னையன்றி அவண யாவருளர்? ஆகையால் என் வேண்டுகோளின்படி இநநான்குமா தமும அவனிடமிருநது அரசு அவனுக்குக கைவருமாறியற் றிப பின்னர் என்பால்வந்து எனக்குவேண்டிய காரியங்க ளைபபுரிவை யெனவிடுகக அவவாணையை மறுத்தறகஞசி சென்னி இறைஞ்சிச் சென்றனன்.

7-வது அத்தியாயம்.

அக்காலத்தில், தன் மகனுக்குச்செய்த வுதவியை ...ன்னிச்சனககுலரத்னத்தை முனனேசென்று நாடுவான் ...லச் செங்கதிர்ச்செல்வன் தென்றிசைநகண் மேவினன். தன்மதலையைக் கோறல்செய்த கொடுமை நினைந்த பாகசா தனன், முன்னேவராமல இந்திரதனுசும அமபுமகொடுத்து இராமனேடு போர்செய்யுமாறு விடுத்ததுபோலக் கார்மே கஙகள் கவிந்தன. அவ்வெழிலிகள், இவ்விராகவன் தன் மேனி நிறத்தால் நமமை வருத்தினனெனப் பழம்பகை யுன்னி இதோ நினக்குத் துணைவரநிற்கும யூகவர்க்கங்களை யும நின்னையும் வருத்துகின்றேமென்பதுபோல அப்புமாரி பொழிநதன. அக்கார் தன் சுபாவப்படிக் குளிர்ச்சிபுரியாது, துணைபிரிநதோர்க்குத் துனியகாமககனலை விருத்திசெய்த து. அககார்காலம, தன் குளிர்ச்சியாலவருத்த அத்தாணுவும தழலேநதித் தந்தித்தோல் போர்த்துச் சுடலைசார்ந்தனனே? அததாணுவின் மைத்துனன், அத்தாணுவுட் கரந்தனனே? சதுர்மறைககிழவன் ஆயிரமிதழ்க் கதவடைத்துத் தாம ரைக்குட்புகுநதனனே என்னுமாறு நிகழ்நதது. மேலும அநதோ!! வறுமையும் அஞ்ஞானமும, உலோபமும,முறை யே கல்வியையும, மெய்பபொருளையும், அறத்தையும், தடு பபதுபோல ஜனகநநதனியை நாடுமுயறசியைத் தடைசெய் தது அத்தடையை நிவிர்த்திசெய்ய அவ்வாவிநத லோசன ஞலாகாதா? அவனது அக்னியஸ்திரமொன்றே யமையும்,

உலகத்திற்கு உறுதியாய் அறமபொருளின்பஙகள் நடததற் கேதுவாயவான் பெயலைததடுத்ததாக வாகுமே என வாளா விருநதனன் போலும்.

இவ்வாறு இவ்வருஷருது அரிதிற்பெயர்ந்தபின், ஓர் தினம கிட்கிநதையில் வெருவி இரியலுற்றஅரி இனஙகளால சுமித்திரைச் சேயத்தின்வரவு உணர்ந்த அஙகதப்பெருமான், மதுவுண்டு மயஙகிக்கிடக்கும் வண்டுபோல நறவருநதி மஞ் சத்திற்றுயின்று மெய்ம்மறநது வதிந்திருந்த தன் சிற்றப் பனை யடுத்துணர்த்தித் தன்னுலானமட்டும் எழுபபியும இயலாமல் எதிர்பபட்ட அஞ்சனைச்சிங்கத்தின் மாட்டு அறிவிக்க அவனும தாரைவயின்விளமபிநிறந, அவள் அநதோ! நீவிர என் செய்திாகள் நமியல்பு யானை தன் மதத்தால் தலையில் மண்ணைவாரிப் போடடுககொண்டதும, கங்காதத் தன் என்னும் தவளை தன் சத்துருநாசமசெயத சர்பபராஜ னுககு அஞ்சியதும போலாயிற்று. வநத இடையூறு நபப வழிதேட முயலவேண்டுமே இல்லையாயின் அதோவருகின்ற அச்சாபபாம்சருக்கு நாமனைவோரும் இரையாதல் திண்ணம, யாாககும காலக்கிரமம தவறிநடப்பது காலனுககுமுடியும. சொன்னகூற்றுத் தவறுவதும் அன்னகூற்றேயாகும எனக் கூறிப் பரிதபித்துக்கொண்டிருந்து, குரங்குகளால டைக்கபபட்ட வாயிலைப் போத்துக்கொண்டு குறுக்குவழி பற்றி அதிவேகமாகவரும இளையபெருமானை எதிர்கொண்டு அழைத்துப் பல உபசாரமொழிஉரைத்து, ஐய! நீ இவண் வந்த கருத்து என்னெனவினவச், சற்றுநாணமுற்ற அவர் எமமண்ணலார், இதுகாறும சுக்ரீவன்பால் ஆறறுநீரபோல் தாராளமாய் ஒழுகினை நம ஒழுக்கத்திற்கு அவன்மொழி மாற்றுப்பொருள்கூறிக காலநதாழத்தது, எமமோடு கொண்டு கூட்டாமா எனவும அரஙனமாயின் நம விற்பூட்டுவேண்டுமாவெனவும கூறிமாறுரைகேட்டுவாவென என்னை ஏவினர் என்றனர். அதுகேடடவாலி மனைவி, அநதோ!! ஐய! அவன், நீவிர்செய்த நன்றியை மறந்தானல்லன். தேனீக்கள்போல எஙகுமபரவிச்சென்ற வானரசேனைகளை வருவிக்குமாறு தூதாகளை ஏவி அவாகள் வரவுநோக்கி இத்துணைபபோது நீடித்துளன். ஆதலின் எமமீதுகொண்ட சினமொழிநது

காக்கவென இரந்துநிற்க மாருதியும் வேண்டுமாறு கூறினன். ஆங்குணர்ந்துநின்ற அங்கதன், குறிப்புநோக்கி விரைந்து சென்று, சுக்ரீவனையெழுப்பி உணர்த்த, அவன் நித்திரை தெளிந்து உய்த்துணர்ந்து மிகப்பயந்து பதைபதைத்து அச்சோ!! மதுவுண்டதாலன்றோ இது வந்தது, இதனால் எத்துணைக்களித்தோமோ அத்துணைக்கு மேலும் துயர்ப்பட்டோந் தவி. அது நாமுள்ளவரையுமேயன்றி அப்பாலும் தீராதவசையும் அளித்தது. இதனை நல்லோர் மனதாலும் நினையார். அந்தோ!! எம்பிரானுக்கு வெம்பிழை புரிந்தோமே! எம்முகங்கொண்டு அம்மன்னவர்பால் ஏகுதும் என எண்ணமிட்டு ஏங்கிநிற்கையில அநுமானவந்து நம் வாயிலில இளவல எய்தினர் எனவே, எழுந்துசென்று இருவரும் அளவளாவி முகமனியம்பி இராமனசமுகம் சென்றனர். மகாராஜா, தான செய்த பிழையை க்ஷமிக்குமாறு வணங்கி வேண்டிநிற்கையில், அறுபத்தேழுகோடி படைத்தலைவர்களுடன் எழுபது வெள்ளங் குரங்குச்சேனைகள் நீலனால் கூட்டப்பட்டு வந்தன. அவற்றைக்கண்டு களித்த அண்டநாயகனபால் பொன்னுழியெற்று திங்களொன்றில் சீதையைநாடி மீளவல்லனச் சிலருடன அநுமான தென்றிசைமேவினன். ஏனையோரும் ஏனைய மூன்று திக்கும் ஏகினர்.

ஓ முனிபுங்கவர்களே! இதுகாறும் சுக்கிரீவன் அடைந்த மூன்றுவித பயங்களும் நிவிர்த்தியாயின. இன்னும் ஒன்றுளது அதுநீங்கின அன்றுதானே அரிந்தமனும் துக்கத்துக்கு கடைகண்டனன் என்று கதைத்து அப்பால் அறைய ஆரம்பிக்கையில் அந்தணரில சிலர் பாதவசிஷ்ட! இந்திரன் மகனைச் சங்கரியாமலே அவ்விராமன், குரக்குச்செயலிதுவென அறக்கருணையால க்ஷமித்தது அவனோடு தோழமைகொண்டு அலைகடலிலங்கையை யழிக்கலாகாதாவென வினவக், காவிரிதந்த கமண்டலமுனிவன, அறறன்று அறன் கடைநின்றோரை அணுகலுமநீது, அவனை அவனியில நிறுவலுமநீதி, அவனைக்கொன்ற மறக்கருணையினாலேயே அவ்வமலன்பால் சுக்ரீவனுக்கு இத்துணைப்பயமும் பக்தியும் அன்பும் இடையறா நட்பும் ஒருங்கே இயைந்தன. இங்ஙனமின்றேல் குரக்கியல்பு மறக்கும்பகுதியது. கள்ளவரக்கனுக்கும் சிறிது உள

ளகதல்க்கம் கேரிட்டது. இக்கருத்துப்பற்றியே வாலி உற்ப வமும சங்காரமும நிகழ்ந்தனவென்க

அப்பால் ஆதிநாயகனும ஆதவன்சேயும் இளையோ னும் அறுதிசெய்யபபட்ட மாதமொன்றினிறுதி அணுகும சமையத்துக் "கண்டுவந்தேன்கண்டுவந்தேன்" சீதையைஎன் னும ஒலியொன்று கேட்டுக் காதல்கொணடு அத்தொனிவந்த திசையைத் திருமிநோககினர். அக்கணத்தில் அஞ்சனைமரு சன் அனுநவநது கண்டவர் விண்டிலர் என்னுமாறு சற்று நேரம யாதும் உரையாடாது ஆனந்தக்கூத்தாடிப் பின் இரா மனைநோக்கி ஐய! அநதரததுயாநத விந்தம, தருமமவளாக கும் நருமதை, தாமகூடமுற்ற ஏமகூடம, அருமபிலத்துறற சுயமபிரபைநகா, துமிராசுரனுக்கும எமபிளவரசனுக்கும போர்மூண்டதலமாகிய பொய்கை, வெண்ணெயை நிகாத்த பெண்ணை, மதாத்தகூழ்விளையும விதர்ப்பம, அண்டருமவி ருமபும தண்டகம, கண்டவா மனங்கவா முண்டகத்துறை மாதாமூலையென்னும கோதாவிரி, கவனநீருடைய சுவண நதி, கொழுவளமுற்ற எழுவகைககொங்கணம், செழுநத வர் வணங்கும் அருநததிமாமலை, ஓஙகிடமளிக்கும் வேங் கடவோங்கல், ஈழமவிளையும சோழநாடு, சங்கமிருந்த தண் டமிழ்நாடு இவைகளைக்கண்டு களித்துக் கடநது சமபாதி சமபாஷணமபெற்று மகேநதிரமேறி மகார்ணவத்தைக் கட க்கையில் மைந்நாகனோடு வசனித்து அங்காரதாரையைச் ச ங்காரஞ்செய்து இலஙகைமாதேவியை மலங்கவதைத்துச்சு ற்றி நோக்குமபோது மகேந்திரகிரியினின்று முன்னர்க்கண் டபொன்னகரோ இநநகரென எண்ணினேன், நண்ணியுற்றுப பார்ப்புழி அநநகர் இந்நகருக்கு நரகமாகக்காணப்பட்டது. அரக்கன்செய்ததவமே அவ்விசுவகர்மாவிற்கு அதிமதிநுட் பமளித்து இதனைச் சிருஷ்டிக்கத் தூண்டினதேயன்றி வே றன்று. இதற்கு முன்னும் பின்னும் அவனாற் செய்யப்பட்ட வைகளை யாம் கண்டோமே இப்பட்டணப்பிரகாசத்தினால் அபபகலவன்தன் ஒளிமுன்னின்ற சந்திரன்போலன்றோ பிர காசிக்கின்றான். அரக்கர்களும் தங்கள் நிறமாறி அவ்வருக் கன்போல்கின்றார்கள். மகாமதியுடையோரை மநதமதியோர் சாரின் அன்னோரையொபப விளங்கல்போல இதனைசசார்ந்த

நிசாபதி இரவியாலடைந்த வொளிமழுங்கலும் தனக்கியல்பாயுள்ள களங்கமுமின்றி ஒளிவிடுகின்றான். இங்ஙனம் செம்பொன்னாலும் வெண்பொன்னாலும் செய்யப்பட்ட மாடமாளிகைகள் கூடகோபுரங்களிருக்கினும் அவற்றாலியப்பட்ட கொடிசெடி விருக்ஷமுதலியவைகள் கோமேதகமுதலிய நவமணிகளாலியற்றப்பட்ட தழைமுதலிய பலன்களைத் தருமெனில் ஆர்தாம் ஆச்சரியப்படாமலிருப்பர். மதுமாமசபக்ஷணிகளாய அவர்கட்குத் தாவரவர்க்கபலன்களேற்றிறகு? தேவாமிருதமெனினுமவிரும்புவார்களா? அந்நகரத்தார்களுக்குக் குற்றேவல்செய்கின்ற அரம்பைமுதலிய அரிவையர்களையும் அமரர்களையும் இமையாநாட்டத்தால் அறியலாமேயன்றி வேறின்று. புஷ்பகத்தோடு நிதித்திரள்யாவும் அத்தனபதிசோதரனாகிய இவ்விலங்கேசனுக்கு நாதனன் போலும். இந்திரதிருவெல்லாம் இங்கிருக்கின் அங்கு என்ன இருக்கும், அந்நிலமே பொன்மலையின் சிகரமாயிருக்கின் வேறுயாது புகலற்பாலது. எனஎண்ணி இறும்பூதுற்று அந்த இலங்கைசெழிப் விளங்கும் இலங்கையுட்புக்கு எழுநூறு யோசனை விஸ்திரணமுற்ற அவ்விடத்தில் அநிலனும் நுழையாத அருப்புரையாவும் நுழைந்து ஆராயும்போது, அவ்விராவணன் முதலியோரைக்கண்டு அசோகவனத்தில் சோகமுற்று மண்பொருந்த மேனியோடு புண்பொதிந்தசிந்தையளாய நின்னிற்பிரிந்த சீதையைக்கண்டு ஆழிதந்து வாழிக்கூறச் சூடாமணிவாங்கி வரம்பெற்று மீள்கையில் அவ்வனத்தையழித்ததுபோல அவன் அனுப்பின சம்புமாலி பஞ்சசேனாபதிகள் அட்சயன் ஆதியோரை அழித்து இந்திரஜித்தால் கட்டுண்டு இராவணனிடம்வந்து, எய்தியசெய்தியையும் விபீஷணசுபாஷணயவினவி மகிழ்ந்து வாலில்மூட்டிய தீயால் ஊரைக்கொளுத்தி இவண் மீண்டனன். இச்சூடாமணியைக் கோடல்செய்தருளுக வென்றீந்து அடிவணங்கினின்றனன்.

அக்காலை இராகவன் உவந்த உள்ளக்கிளர்ச்சிபோலப் பிலவங்கவெள்ளம் பெருவகை கொண்டிரைந்து சுக்ரீவாக்

கிளையால் தெற்குக்கடல் குறுகிற்று * வீடணன் அடைக்கலமுற்றுத் தேடரிய லங்காராசசிய பட்டாபிஷேகம சூட்டப்பெற்றனன். இராமன் அமபால் அமபுராசி வெமபழல் பற்றியது. அலையில் மலைமிதபபதுபோல வருணன் வெரிந கொடுக்கத் திருவணைமேயது. வேலைகடநது சுவேலைசேர்ந்து சோரசுகசாரணைக் கொண்டு சிலசொற்கள் இராமனல் சொல்லி அனுப்பபபட்டன. இராவணன் முதலியோா, கோபுரக்குன்றி லிவர்நது குரகவெள்ளத்தைக் கண்ணுறுகையில் சுவேலாசலத்திலிருநத இராமனுக்கு இவனே இராவணனென வீடணனுற் சுட்டிக்காட்டப்பட்டபோது அச்சுட்டுச்சொல்பின்னுக இரவிகான் முளை, திட்டென எழுநது முன்பாய்ந்து அத்தசமுகந்துட்டன முன குதித்தனன் இருவர்க்கும் பொ நவறுமல் யுத்தமூண்டது. இருபதுதோள்களும் ஒருபதுமுகங்களும் பருவரலுறச் சிறுவிரல்கொண்டு கிறபபட்டேறுற்றன. கருஞாயிற்றை வெண்ஞாயிறுகலந்த வண்ணம் காணப்பட்டது. காரககன் களேபரமமுழுதும இரத்தவெள்ளத்தால் சிவபபுற்றது. மதயானையை ஒர் சிங்கக்குருளைபாய்ந்து அறைந்ததுபோலச் சுக்ரீவனுல் அறைபட்ட மண்டோதரி மணுளன் மயங்கினன். இங்கே அணையில் அரிகுலத்தரசன் இல்லாமையைக் கண்ணுற்ற அமலன் அந்தோ!! துணைவா எழுவரில் ஒருவனை இனறு இழநதோமோ எனத் துயருற்றுக கலங்கினன். அக்கலக்கமாற அக்கணத்தில் மகாராஜா, பூநக்குலையைப் பறிக்குமாறு இராவணனது இருபது முடிகளையும பறித்துக்கொண்டு ஐயன் மாடணுகினன. அதுகண்ட காருத்தன் அக்கண்டகனது கண்டமொருபதும் கொண்டுவநததாகப பாவித்து அன்பனைக்கொண்டாடிக் களிகூர்நதனன்.

அப்பால் செப்பவிடுத்த அங்கதன் தூது துப்பின்ருயது. வானரசேனையால் வானளாவிய அவ்விலஙகைமாநகர்

---

* அநலன, அநிலன், அரன், சம்பாதி என்னும நான்குமந்திரிமாருடன் வந்தனன். இவன் மறத்தைவிடுத்து அறத்தைக்கொள்ளுமகுணமும் யாருக்கும் போரிலிளையாமையும் தெய்வபத்தியும் பிரமனிடம் பெற்றுவந்தவன்,

வளைத்து முற்றுகை போடப்பட்டது. அநுமானுக்கும் அர சகரிறைக்கும அமர்நடந்தது. முதல்நாள் நடந்த முனைமு கத்தில் முனைவன் கணை என்னும மூரிக்காற்றால் இரா க்ஷசேந்திரன் என்னும சிமுதம யோதப்பட்டு அநதபுர மென்னும் ஆர்கலிக்குழியில அமாநதடங்கிற்று. ஆதியில் சண்டமாருதத்தால் அலைக்கபடட்டுச் சிகரமிழந்த அமமக மேருபோலக கிடந்த அவ்வரக்கன் மகாபாபியாகிய மந்திரி மகோதரனால் மனம்மாறுபட்டு, நித்யத்துவம் பெறபபோய் * நித்ரத்துவமபெற்றுத்தன் வாழ்நாள்களை $ ஆறுமாதம் நித்திரையிலும் ஆறுமாதம் விழிப்பிலும் கழித்து இந்தயுத் தமாரம்பித்த காலத்தில் தூங்கும் ஒப்புயர்வற்ற பர்வதா கிருதியான தேகபீனத்துவமும் பலமும் உடைய கும்ப கர்ணனாகிய தமபியைத் துயிலுணர்த்திக் கொணருவித்து "தம்பியுள்ளான் படைக்கஞ்சான்" என எண்ணிப போர்புரி யுமாறு ஏவினன். ஏவவே அவனும்தன் அண்ணனுக்கே ற்ற புத்திக ளியம்பியும் ஏறுமையால் இன்றோடு இக்கர் வாசம் நமக்கின்றாயதென எண்ணி இரணகளம் புக்கு எதி ர்ப்பட்ட குரங்குகளை யெல்லாம் தன்பசியாற எடுத்தெடு த்து வாயிலிட்டுவிழுங்கவே அவைகளவனது கண் காது மூக் குகளின்வழியாக வெளிப்பட்டன. திரிசடையின் தந்தை, தன் சிறிய தமயனெனச் சிந்தையுருகி அவனைச் சிதாபி ராமன் திருவடியடையுமாறு வேண்டினன். அதற்கு அவ ன் தமபி! நீ சிரஞ்சீவிவரம பெற்றவன், அண்ணனுக்குச் சரமகிரியைகள் செய்யவும இலஙகா ராச்சியபாரந் தாங்க வும் அடைக்கலம்புக்கனை. யான்சோற்றுக் கடனைத் தீர் ககவேண்டாவோ? எனககூறி விடுத்து அனேகவானரங் களைக் கையினாலும காலினாலுமபிசைநதும மிதித்தும் கொ ன்று வசந்தனென்னும வானரவீரனைபபற்றிப் பிசைந்து சநதனம்போல மாாபிற்பூசியும் நெற்றியில் திலதம்போலிட் டும வந்தான். அதுகண்டநீலனும் அங்கதனும அநுமானும்

---

* நித்ரத்வமென்பது இராமியம்போலும், நித்ராத்வமென்க.

$ இடையில் நித்ராபங்கமுறின் அவனுக்கு மிருத்யுநேருமென்பர்.

சுமித்திரைச்சிங்கமும் போாபுரிந்துகொண் டிருக்கையில் சுக்ரிவனுமெல் யுத்தம்புரிந்து இராகபபற்றினமையால் அவன் பயந்து மூர்ச்சித்தனன். அப்போது கும்பகாணன் இவனை எடுத்துக்கொண்டு சென்றுவிட்டால் எல்லாக் குரங்குகளும் முன்னிருந்த இடம் ஏகும். அவைகளைநம்பிவந்த நரர்களும் வெம்பிவெறுத்து மீண்டுபோவர் என எண்ணி அவனை ஒரு கரத்தால் அங்ஙனமே இடுக்கி அணைத்துக் கொண்டு செல்லலுற்றனன்.

அவ்வாறு செல்லக் கண்ணுற்ற வானரங்களோடிடமழைவண்ணன்பால் சொல்ல, அம்மகாநுபாவர், விரைந்து வந்து பாணங்களால் அவன் செல்லும் வழியைத்தடுத்து, சூரியகுமாரனைபபற்றிய புயத்தில் ஓர் விசிகமும், நெற்றியில் இரண்டு கணைகளும், பிரயோகித்தனன். அவ்வளவில் அபபுயமநெக்குவிட்டது. நுதல்செந்நீர்க்கடலைத் திறக்கவே காற்றுலாயது. அதனால் மகாராஜா, மூர்ச்சைதெளிந்து நோக்க இலலாடத்தில் விளங்குவது இராமசாயகமெனத்துணிந்து விரைந்து அவன் நாசியையும் காதையும கரத்தால் பறித்துக்கொண்டு ஆசுகம்போலப் பறந்து ஆரியன்பாலணுகினன். இவ்வண்ணம இவனுக்குவந்த பயமும் ஆபத்தும் இராமபத்திரனால் விலகின. சற்றுநேரத்தில் அக்கும்பகானனும் சாம்பினன். அப்பால் மாயாஜனகவதததால் வைதேகி புலம்பினதும திரிசடை தேற்றத்தெளிந்ததும, இளையபெருமாளால அதிகாயன் [illegible]ாயமடைந்ததும, இராவிலே இந்திரன் பகைவன் [illegible]வில்லவலோடு இருநகவிச்சேனையை நாகபாசத்தால் கட்டினதும் விகங்கராஜன் வந்து அபபந்தம நீக்கினதும, மறைந்துவந்து மலரவன்அத்திரத்தால் அவ்விந்திரசித்து மாருதி சாம்புவன் விபீஷணன் இராமன் இவாகள தவிர இளையவன் முதலியோரை வதைத்ததும மருத்துமகன் மருத்துமலை கொணர்ந்து பிழைபபித்ததும், இரற்கிடையில் அரக்கர் பிணங்களை யெல்லாம அளக்கரிலெறிந்துத் தமைகந்த மகனைத் தருவித்து அரக்கரிறைவன் காட்டினதும இராவணி மாயாஜனகனைககொ

ணர்ந்து வானவர் பெருமான் முன் வாளால் வெட்டிவிட்டு அயோத்திக்குப் போகிறதாகச் சாலமகாட்டி நிகும்பலை யாகம்செய்ததும், அது அழிக்கப்பட்டதும் அம்மேகநாதன் இளவலால் அழிந்ததும், மூலத்தானையை மோகனாத்திரத் தால் இராமன் ஏழரை நாழிகையில் முடித்ததும் இளவ லோடு ராஞ்சுமுகன் எதிர்ந்து எறிவேலைத்தன் இளவல் மேல் ஏவ அதனை இராமாநுஜா ஏற்று உயிர்விட்டதும், கந்தவாகன் மைந்தன மீண்டும்போய்ச் சஞ்சீவிகொணர்ந்து அவனை உயிர்ப்பித்ததும், இதுகாறும் அநுமான் தோளிலி வாந்து உயுத்தஞ்செய்த இராமபிரான், இந்திரன் அனுப்ப மாதலியால் தூண்டப்பட்டுவந்த இரதத்திலேறி அளவிலாத அரக்கர்படையோடு மகோதரனை அந்தகபுரத்துக் கனுப்பி அரன் கைலையை அடியோடு பெயர்த்தெடுத்த அனைகடை யிட்டமுனிகோடி யாயுபெற்ற இலங்கேசனோடு பொருது மா பைந்துளைந்து அவனைச் சங்கரித்ததும், தங்கை சூர்ப்பந கைதன் புருடனைக் கொன்றபழிக்கு எதிர்ப்பழியாக நின் னை நின் குலத்தோடு இவ்வண்ணம் மாய்த்தனனோ என அண் ணனைக் கூவி விபீஷணன் அழுததும், மயன்மகள்வந்து அ நந்தோ இராமபாணம் சீதைமேல்வைத்த ஆசையை நின் மார்பைப் பிளந்து கொண்டுபோயிற்றோ! அத்தன்மைகளைத் தழுவநினைத்த நீ அது இயலாமல் இத்தன்மைகளைத் தழுவி னையோவென்பப் புலம்பி உயிர்மாய்ந்ததும், மஞ்சன நீரா டிக் கலனகளபூண்டு ஆஞ்சனேயரா லழைக்கப்பட்டுவந்த பொன்னைத் தீயிலிட்டுப் புடம்போட்டு எழுப்பண்ணி உய ர்ச்சியடைவித்ததும், பிரியப்பயந்து நின்றவிபிஷணன் சுக் ரீவன் அநுமன் முதலியோரைக் கடாக்ஷித்து உடன்கொ ண்டுபோக விண்ணவர்பெருமான் விமலையோடு விமான மேற நிற்கையில், கும்பகர்ணனால் குமைக்கப்பட்டு உருவ ழிந்தவசந்த னில்லாமையால் அவன் சேனைமாத்திரம் அவ் விமானத்தில் ஏறாமல் நிற்கக்கண்டு அநுமானை அயன்பால் விடுத்து அழைப்பித்ததும், அப்பால் அனைவரும் அப்புஷ் பகத்திலேறிப் பரத்துவாசர் ஆசிரமம் அடைந்ததும், பர

தனை எரிபுகாமலிருக்க அநுமானை முன்ன ரயோத்திக்கு அனுப்பியதும் அப்பால் அனைவருடனும் சாகேதநகரஞ் சென்று மகுடாபிஷேகம்பெற்ற இரகுபுங்கவன், பொதுசிறப்பெனலாய விதியோடுமேயமநுநீதியை, வானோர்முதலிய மன்னுயிர்களால் நன்கு மதிக்கப்பட்ட தன்மரபிற்குவாய்ந்த முறையினின்றும் வழுவாத இசையினது பெருக்கின்கண் காட்டினனென்பதும், கொழுவிலுதித்த ஒழிவறு பெருஞ்சோதி மதிமுகச்சிறுநகைப் பைந்தொடி சமேதனாய், அகன்று நீண்ட நனியுயர்மதில்வளை அயோத்தியில் வாழ்க வாழ்க என அந்தணர் ஆசியொலி தழைக்க வீற்றிருந்தனன் விமலன் என்பதும் நீவிர் அறிந்தவையேயெனவிளம்பக்கேட்ட முநிவர்கள் ஓ தாபஸேந்திர! வைகுண்டநாதனும் மகாலக்ஷ்மியும் மானுடஜன்மமெடுத்ததற்கு வேறுகாரணமிருக்கின் அதுவும் காலவரம்பும அநுமானது வரலாறும் சற்று விவரிக்கவேண்டுமெனச் செந்தமிழ்ப் பிரதமாசாரியன் செப்பலுற்றனன்.

ஆதியந்தமில்லாததென்றும், அலகில்லாத பிரபஞ்சத்துக்கெல்லாம் காரணமானதென்றும, ஆதிபகவனுடைய சொரூபமென்றும அறையப்படும காலமெனனும அகண்டப்பொருள், லோகவியவகாரத்திற்குச சில உபாதிகளால் கற்பம், மநுவந்தரம், யுகம, ஆண்டு முதலியனவாகப் பிரிக்கப்பட்டது. பிரமனுக்கு இக்கற்பம இரண்டு கூடியது இரவும் பகலுமான ஓர்நாள. இந்நாள் முந்நூற்றறுபதே ஓர் ஆண்டு ஆம. இப்போதிருக்கும் அன்னவூர்திக்கு நிகழும இச்சுவேத வராககற்பமென்பது ஐம்பத்தோராவது வயதின் முதற்றினம் ஆம். சாதாரணமாக கல்பமொன்றிற்குப் பதினன்கு மநுவந்தரங்களுண்டு. ஒவ்வொரு மநுவந்தரமும் எழுபத்தொன்று $\frac{3}{7}$ யுகங்கொண்டதாகும. சுவாயம்பூ மநுமுதலிய ஆறுமநுவந்தரங்கள் இதுகாறும சென்றன. நிகழ்வது வைவசுவதமநுவந்தரம. மநுவந்தரம் மநுவின் மூலமாயுண்டான பிரஜைகளின் காலமென்பது. இவ்வந்தரத்தில் இருபத்தேழுயுகம் கழிந்தன. ஒருயுகத்திற்கு 4320000 - மானுஷ

று உண்டு. நிகழ்வது இருபத்தெட்டாம் யுகம். இவ் யுகம் தருமவளத்துக்குத்தக்கவாறு கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம் கலியுகமென நான்காக வகுக்கப்பட்டது. தருமமும் முறையே நான்கு, மூன்று, இரண்டு, ஒன்று என்னும் பாகுபாடாய் நிகழும். அந்நான்கு வகுப்பிற்கும் முறையே வருஷங்கள் 1728000,1296000,864000,432000-ஆம். இவ் வராககல்பத்தில் சுவாயம்பூ மனுமுதல் ஆறுமநுக்கள் காலத்தில் ஸ்ரீவாசுதேவன் மச்சக்கூர்மவராக நாரசிம்மமாகிய நான்கு அவதாரமெடுத்து லோகபரிபாலனம் செய்தருளினன். அவனுக்கு இந்நான்கும் அயோனிஜம். 7-வதாகிய இந்த வைவசுவத மநுவந்தரத்துள் 28-வது யுகத்தின் முதற்பரிவில் வாமனனும் பரசுராமனும், 2 மபிரிவாகிய திரேதாயுகத்தில் 7-ம திருவவதாரத்தில் ஸ்ரீராமனும் தோன்றினன். இப்போது மரித்த இராவண கும்பகர்ணர்கள், ஆதியில் பரமபதவாயில்காப்போராயிருந்த ஜயவிஜயர்கள், சனகனுதியர் சாபத்தால் ஏற்ற மூன்று ஜன்மத்தில் 2-ம ஜனனமுற்றவர்கள். இத்தசரதபுத்திரன் பதினோராயிரம்வருஷம் அரசாட்சிசெய்து தன்னடிச்சோதிக் கெழுந்தருளினன்.

பாகவதத்திருவிருத்தம்.

ஆயிரஞ்சதுருயுகத்தினின்மநுக்களடைகுவர்முறைமுறையடைந்து
மேயவீரேழுமநுக்களுமடங்கின்விரிஞ்சனுக்கொருபகலிறத்தல்
நேயமார்பகலினளவையாயவற்குநிசியும்வந்துற்றுநீங்கியபின்
மாயனாருளான்மற்றையநாளுமறையவனின்னணம்வகுக்கும.

---

* வைவச்சுவதமநுவந்தரம், 5-ம் திரேதாயுகம், 4-ம் பாகம், 30000 - வருடத்துக்குமேல் செல்லாநின்ற விளம்பியில் சித்திரைமீ பூர்வபக்ஷம், நவமி, புதவாரம், மத்யான்னம, கடகலக்கினத்தில் ஸ்ரீராமபிரான் அவதரித்து சீதாசமேதனும் 1000 - வருஷமும், தனியாக 9962-வருஷமும் இராஜ்யபரிபாலனஞ்செய்தனர் என்றும், வால்மீகத்தில் "దశవర్షసహస్రాణిదశవర్షశతానిచ । రామోరాజ్యముపాసిత్వా బ్రహ్మలోకంగమిష్యతి" என்றபடி 11000-இல் என்றும், பாகவதத்தில் "அருளொடுபதின்மூன்றுயவாயிரம்பருவமாகீர், இருநிலம்புரந்தான் செங்கோலிராமனென்றுரைக்குமெம்மான்" என்றும் கூறுமாறுகாண்க.

எழுநிலம்புகழேழாமநுவென்பானிலங்கியவிச்சுவானின்ற, தழை வுறுபெயர்வைவச்சுதனுகுஞ்சாற்றுமிக்கலத்துமநுவாய், மொழிதரும ன்றேனிக்குவாகுவையேமுதலியபதின்மரையுயிர்த்தான், பொழிகதிர் வெள்வேற்புரந்தரனென்பான்பொன்னிலம்புரந்திருக்கின்றான்.

கலைபயில்சமதக்கினிகவுதமன்சீர்க்காசிபன்கோசிகன்வசிட்டன்
பலர்புகழ்பரத்துவாசனென்றுரைக்கும்பண்ணவனத்திரிபகாவோர்
இலகுமேழ்முனிவராயிருக்கின்றாரிறையவன்வாமனனாகி
அலகறுபுகழ்சேர்மாவலிபாற்போயவனிமூவடியிரந்தனனால்.

இவ்விறைவன் இங்ஙனம் மானிட ஜனனமெடுத்துத் துன்புற்றதற்கும் ஓர் காரணமுண்டு. ஓர்காலத்தில் தேவர்க ட்கும் அசுரர்கட்கும் செருநிகழ்கையில் பிருகுரிஷியின் பத் னி அசுரர்மாட்டுவைத்த அன்பினால் அவர்கட்கு நன்மை செய்தமைகண்ட அரிந்தமன் அவள் சிரத்தை யரிந்தனன். அதுகண்டு அம்முனிவன் முனிந்து விண்டுவைநோக்கி நீ மானிடஜன்மமெடுத்து பாரியாவியோகமும் பலவிதத்துன்ப முமுறக்கடவையெனச் சபித்தனன். பக்தவற்சலனானமை யின் பாகவதவாக்ய பரிபாலனஞ்செய்து மானிடரால் வல் லரக்கர் அழிவர் என்னும் ஆதிசங்கல்பத்தையும் நிறைவேற் றினன்.

மகாலக்ஷ்மியும் தன்னையொத்த மாதர்கட்குக்கற்புநிலை யைக்காட்டி வற்புறுத்தவும், துராசசனர்களைக் களையவும் பல ஜன்மங்களுற்றனள். ஆதியில் குசத்துவசர்க்கு மானசபுத் திரியாய் அவதரித்து வேதவதியென்னும் பெயரினளாயிருக் கையில் தன் தந்தையார் தன்னை ஸ்ரீமந்நாராயணனுக்கே பா ணிக்கிரகணம் செய்துகொடுக்க நிச்சயித்திருக்கும்போது தம்பாசுரன் தனக்கே கொடுக்கவேண்டுமென நிர்ப்பந்திக்க அவர் மறுத்தமையால் அவரை நிந்தனைசெய்கையில் கோ றல்செய்ததுமன்றி அபஹிரமஹத்திதோஷத்தால் தானும் இறந்தனன். பின்னர் அவள் தன் பிதாவின் நிபந்தனைப்படி அப்பரமபதநாதனையே வரிக்கத் தவம்புரிகையில் இராவண ன் கண்டு மோகித்து அவளத்தவத்தை யழித்ததினால் அவ னை நோக்கி அடா பாவீ! யான் மற்றொரு ஜனனமெடுத்து நின்னையும் நின்குலத்தையும் நாசஞ்செய்வேனெனக்கூறி

அக்கினிப்பிரவேசமாயினள். அங்ஙனமே அவள் இலங்கையில் ஓர் தாமரைப்பொய்கையில் ஓர் புண்டரீகமலரில் உற்பவமாயிருக்கச் சிவபூசைக்கு வேண்டுமே மலர் கொய்யவந்த அத்தசகண்ட கண்டகன் கண்டு தூக்கிவந்து ஜோதிஷர்கட்குக்காட்டி ஜாதகபாவம் விசாரித்தனன். அவர்கள் இக்குழவி இருக்கிலிருக்கில் நகரமும் நாமுமழிவது திண்ணமென்றுரைத்தனர். அதுகேட்ட அவ்விலங்காதிபன் மிகக்கலங்கித் தக்ஷணமே அதை ஓர்பேழையில் வைத்து ஆழியில் விடுத்தனன், அக்கடல் அப்பெட்டகத்தை அலைகளாலலைத்துக் கொண்டுவந்து மிதிலாநகரத்துத் தரையில் செருகி விலகியது. அதுதான் ஜனகராஜன்யாகத்தின்பொருட்டு உழுதநிலத்தில் கண்டெடுக்கப்பட்டது. இக்கற்பின தீபவொளியைக்கண்டு வீழ்ந்து அரக்கர்குலமாகிய பதங்கங்கள் வீய்ந்தன. இவள் மகவுய்ய மருந்துண்டு வருந்தும் மாதாவைப்போல அவ்வல்லரக்கன் வைத்த வன்சிறையிலிருந்து எறகுறைய ஈராறுதிங்கள் வருந்தினள்.

ரமாமநோகரனுக்கும் ருமாமணாளனுக்குமன்புபொருத்திய அநுமானது தாய், பூர்வத்தில் வருணன் புத்ரியான புஞ்ஜிகஸ்தலையென்னும் பெயரிய ஓர் அப்ஸரசுப்பெண்ணாயிருந்தனள். அவள் தனக்கு நேரிட்ட சாபத்தினால் கண்டவர் மனத்தையும் கவரத்தக்க கவினுடையகச்சரூபமாய்ச் சனித்து அஞ்சனையென்னும் பெயர்பூண்டு கேசரியென்னும் ஓர் வானரராஜனுக்கு மனைவியாயினள். அவள் ஓர்நாள் மானுடப்பெண்ணுருத்தரித்துத் தனியிடஞ்சென்று சந்தோஷமாய் உலாப்போந்து நிற்கையில் சமீரணபகவான் கண்டு மோகித்தபோது அவள்வயிற்றினின்று இம்மாருதி உதித்தனன். அக்காலையில் காலைக்கதிர் கீழைத்திசையிலுதிப்பப் புகோந்தரகிய அக்குழவி இதுயாம் அருந்தும் செழுங்கனியெனச்சிந்தித்து அதைப்பற்றுமாறு விண்ணகத்துத் துணையொன்பயந்தது அதுகண்ட வலாரி தன் வச்சிரத்தால் முகத்திலெறிய இளங்குழந்தையின் இடக்கன்னம் தொடக்குமூரிந்தது. அதுபற்றியே அநுமானெனப் பெயரிடப்பட்டது. அவ்வறைபட்ட

அக்கணமே மதலைமூர்ச்சித்து மண்ணில்வீழ்ந்தது. அதுக ண்ட வாயுதேவன்கறுத்துச் சகலஜீவகோடிகளினும நிறை ந்த தனது வியாப்தியை நிறுத்தினன். அங்ஙனமாகவே அனை வரும் அதிகஉபத்திரவங்கொண்டு மயங்கி முறையிட்டுநிற்க பிரமன், உருத்திரன்முதலியதேவர்களுடன் வந்து பவமான னுக்குத்தக்க சமாதானங்கூறி அவன்மடியிற்கிடந்தசேயை அஸ்தபரிசஞ் செய்யும்போது அது அவ்வேதைதீர்ந்தெழுந் தது. எழவே அநிலனது வேண்டுகோளின்படி அச்செந்தா மரைக்கிழவன், இவ்வஞ்சனைமஞசன் இனி எந்த ஆயுதத்தா லும நந்தாததீர்க்காயுசுள்ளவனும இராமபத்தியிற்சிறந்த பெ ருந்தகைய உள்ளமுடையவனுமாகக் கடவனென்றனன். சிவ பெருமான், தன்னாலும் தன்படையாலும சாகாதிருக்கவெ ன்றனன். மால்தன்வச்சிரத்தால் இறுதியில்லாதிருக்கவென் றுகூறியதுமன்றி ஓர்பொற்றாமரைமாலையும் அளித்தனன். த ருமன் தன்தண்டத்தால் அமிருத்துவும் பிணியின்மையும் போரிலிளைபபின்மையு முடையனுவனென்றனன். வருண தேவன், தன் பாசத்தினுலும் ஜலத்தினுலும் முடிவில்லாதிரு ப்பனென்றனன். குபேரன் தன் கதாயுதத்தினுல் மரணமுறு திருப்பனென்றனன். விசுவகருமன், தான்சிருஷ்டித்த எந் தப்படையினுலும் விநாசமுறு திருப்பனென்றனன். ஏனை யோரும் தத்தமக்கிஷ்டமான வரங்களீந்தனர். சூரியனுவெ னில் தன் கலையில் சதகூறில் ஒரு கூறும் இவன்கற்றற்குரிய பருவமுற்ற காலத்தில் சகலசாஸ்திரஞானமும் அளிபபே னென்றனன். இங்ஙனமிவர்கள்கூறி அளிக்கபபட்ட வரங்க ளைப்பெற்ற அநுமான்வளர்ந்துவந்து சிறிதுபாலியச்செருக் குற்று அருந்தவாகள்செய்யும பெருந்தகைய வேள்விகட்கு ரிய பலபாத்திரங்களை உடைத்தல்முதலிய இடையூறுகளி யற்றிவந்தமையால் அத்தாபதாகள்சினந்து இனி இவனுககு ள்ளபலம பிறர்புகழ்ந்து புகட்டினுலன்றி மற்றியாதாலும் தானே தெரிந்துகொள்ளாதிருக்கக் கடவனென்று சபித்த னர். இதனுற்றுன்முன் சாம்பவந்தன்முதலியோர் புகழ்ந்து மூட்ட இவன்தன் பலந்தெரிந்து அப்பாராவாரத்தைத்தாண்

டி இலங்கைக்குப போயினனெனக. அபபால் இவன், தன் உடலைப பெரிதாகவளர்த்துக்கொண்டு உதயகிரியில் ஓர்கா லும அஸ்தகிரியில் ஓர்காலுமாக வைத்துநின்று சூரியனி டம வியாகரணமுதலிய சாஸதிரங்கள்யாவும கற்றுப பண் டிதனுயினன். இத்தகையான இவன் கிட்கிநதையில் ரிக்ஷரசு என்னும் வானரேசன்முன்னா * பெண்குரங்காகிப பெற்ற வாலி சுக்ரீவர்களோடு நட்புற்று மநதிரிககிழமைபூண்டுவை கினன். அவ்வாலி சுக்ரீவர்கட்குப் பகை மூண்டபோதும சுக்ரீவனைச்சேர்நத இவனுக்கு அவ்வாலியைவீட்டும் சகதி யிருந்தும் அது தோன்றுதது அசசாப ந்தனையாலெனக

வருமுன்னறிந்து வரமளித்த அவ்வாணிகேள்வன் வச னப்படி இவனுக்குள்ள இராமபக்தியின் மகிமை இருந்தவா று என்னே!! என்னே!! பட்டாபிஷேகம் செய்துகொண்டு வீற்றிருந்த அப்பட்டாபிராமன் திருமுன், தத்தமக்கு வே ண்டிய அஷ்ட ஐசுவரியங்களும் பெற்று விடைபெற்றுச் சென்ற சில இஷ்டஜனர்கள் வநது அஷ்டாங்க பஞ்சாங்க வ நதனஞ்செய்து கரங்கூபபிநின்று விண்ணப்பஞ்செயயலாயி னா, ஓ மகபபிரபுவே, ஓர் அதிசயம கேட்டருள்க தேவரீா எமமனேர்க்களித்தருளிய வெகுமதிகள்போலவதல்லாததா ய், கவுத்துவமணியோடொத்த பெருமையும் மகிமையுமுற்ற தமது திருமார்பிலணிந்த முத்து ஆரம ஒன்று அநுமானு க்குப் பிரசாதித்தனுபபினீரனறே அதுபட்ட அலஙகோல த்தை அடியோங்கள் எவ்வாறுஅறைவோம். அதுவாஙகிச் சென்ற அம்மாருதி ஓங்கிய ஓர்மரத்தில் ஏறிக்கொடு அதில் உள்ள ஒவ்வொருமணிகளேயும் பறித்துக்கறித்துபபாாத்து

---

* முன்பு அக்கிட்கிந்தாடவியில் ஓா தடாகத்தில் பார்வதிதேவி நீராடுகையில் சில அரககாகள் பெண்வேடந்தரிதது உடன் நீராடின சூதையறிந்து இனியாவரேனும் இப்பொய்கையில்வந்து நீராடுவரா யின் அவர்கள் தம் ஆணுருவொழிந்து பெண்ணுருவாகுக என்னும் சா பவுண்மையறியாத ரிக்ஷரச அததடாகக்கரையோரமாய்ச் செல்கை யில் தன்னுரு அதன் நீரில் தோன்றக்கணடு வேறொருகுரங்கு இங்கு ளதெனஎணணி அதிற்பாயவே பெண்ணுருவாய்நதனனெனபர்.

வாளாவெறிந்தனன். குரங்கின்கைப்பூமாலை தாங்கெடுமென்பது சரதமாயிற்று என்றனர். அதுகேட்டருளிய அமலன் சிறிதுபுன்னகைபுரிந்து அவன் சிறந்தஞானமுடையவனாதலின் அங்ஙனஞ்செய்ததற்கு ஏதேனும் ஓர்காரணமுண்டென ஆழ்ந்து யோசித்துக்கொண்டிருக்கையில் அக்குரக்கு நாயகனும் கூப்பியகரமும் கூம்பினமுகமுமுடையனாய்வந்து நிற்க அவனை ஆயிராமன் அகமும் முகமும் குளிரநோக்கி அன்ப! நினக்கு யான் கொடுத்த அவ்வாரம் எவ்வாற்றானும் இனிமைதராதொழிந்ததோ என்றருளிச்செய்தனர். அதற்குக் கேசரிசேய் கரங்கூப்பி அத்த! பரதாழ்வானுக்குப் பாதுகமும் இலக்குமணப்பெருமாளுக்கு ப்ராதுருவாசசல்யமும் அங்கதனுக்கு உடைவாளும் சுக்ரீவனுக்குக் கிட்கிந்தாராசசியமும் விபீஷணனுக்கு இலங்காதிபத்தியமும் ஏனையோர்க்குப் பயனுள்ளவைகளும் அளித்திர். அடியேனுக்கருளியதில் ஏதேனும் ரஹசியப்பொருளிருக்கின்றதாவென்று அவ்வாறு பரிசோதித்தேனேயன்றி வேறின்று. அம்மாலை தேவரீர்போல் அரசியல் நடத்தும் இறைவர்கட்கு உபயோகமாகுமேயன்றி அடியேனையொத்த பிரமசாரிகட்கு உபயோகப்படுதல் கூடுமோஎன்றனன். அதுகேட்டருளிய பக்தவச்சலன் புன்னகைசெய்து ஆழ்ந்துயோசித்து தத்வோபதேசமெனனும் ரத்னமாலையருளினன் என்று கூறிமுடித்தனன்.

இங்ஙனம் கூறக்கேட்ட தண்டகாரண்யத்து எண்டருமுனிவர் யாவரும் மிக்க இறும்பூதுற்று ஓ மாதவசிரேஷ்ட! சுக்ரீவபயநிக்ரகமும் அயக்ரீவனை அவ்விராம சந்திரனது ஜயமுங் கூறின உமக்கு யாங்கள் யாதுகைம்மாறு புரியற்பாலனம், என உபசாரமொழிகள் கூறி விடைபெற்றுத் தத்தம் ஆச்சிரமம் உற்றனர்.

சுக்ரீவபயநிக்ரகம் முற்றியது.

நாடியபொருள்கைகூடும் ஞானமும்புகழுமுண்டாம்
வீடியல்வழியதாக்கும் வேரியங்கமலைநோக்கும்
நீடியவரக்கர்சேனை நீறுபட்டழியவாகை
சூடியசிலையிராமன் றோள்வலிகூறுவோர்க்கே.

# சுக்ரீவபயநிக்ரகம்.

## அரும்பொருள்விளக்கம்.

1-ம் பக்கம்.

சுக்ரீவபயநிக்ரகம்.—சுக்ரீவனது பயங்களைப் போக்குதலுடையது. எனவே அவனது வரலாறும் அவனுக்குத் தோன்றிய பயங்களைப் போக்கினவனது வரலாறும் பிரதாபமும் கூறுதலுடையது இந்நூலென அன்மொழித்தொகைக் காரணப் பெயர் என்க.

தாசரதியென... ...........நினைப்பாம்பெட்டு.

தாசரதியென.—தசரதன் புத்திரனென்னும்படி, உதித்து-அவதரித்து, தாடகையை வதைத்து-தாடகையெனனும் அரக்கியைக் கொன்று, அணிசானகிகை தொட்டு-அழகிய ஜனகன் புத்ரியைப் பாணிக்ரகணம்செய்து, மூசு அடவிபுக்கு (மரமுதலியவை)நெருங்கிய காட்டிற்பிரவேசித்து, அரக்கரெற்று-கரன்முதலிய அரக்கர்களைச சங்கரித்து,அவள் நீபபுஉற-(அந்தச்சானகி)நீங்கினமையால, இரவிமூளையை-சூரியன் புத்திரனாகிய சுக்ரீவனை, நட்டு-(அச்சீதையைத் தேடுதற்கு) நட்புக் கொணடு. வாசவன் புத்திரன் படுத்து - இந்திரன் மகனாகிய வாலியைக் கொன்று வாரி அணையிட்டு - சமுத்திரத்தில் திரு அணைகட்டி, இலங்கைமன் ஐ அட்டு - இலங்காதிபனாகிய இராவணனை வதைசெய்து,நேசம் மலர்மானொடு-அன்பையுடைய அச்சீதாதேவியோடு-அயோத்தியிற் கிட்டு-திருவயோத்தி நகரில எழுந்தருளிய-நிமலன் இசைபெட்டு - பரிசுத்தனது கீர்த்தியை விரும்பி - நினைப்பாம் - தியானிப்போம்.—எ-று.

இதில் ஆற்றொழுக்காக இராமன் அவதாரமுதல் பட்டாபிஷேகம் வரையில் கூறினமையும் தாசரதி,சானகி, இரவிமூளை,வாசவபுத்திரன் என்னும் பெயர்களால் அவரவர் தந்தை பெயர் தோன்றுமாறும காண்க. அயோத்தி யென்பது பரமபதத்திற்கும் பெயராதலின் இராகவன் தன்னடிச் சோதிக் கெழுந்தருளியது வரையிலும் என்னலும் ஆம். ஆகவே நூல் நுதலிய பொருளும் வணக்கமும் கூறியவாறுயிற்று.

பசுமை, செம்மை, பொன்மை, கருமை, வெண்மைகளும், பஞ்சபூதப் பெயர்களும் முரண்தொடைகளும் ஒன்று முதல்-18 எணகளும் தொடர்ந்தவாக்கியமும் வந்தமையுந்தறுணர்க ஐந்திணை-முல்லை, நெய்தல், குறிஞ்சி, மருதம, பாலை அறுதொழில்-உழவு, தொழில், வரைவு, வாணிபம், விச்சை, சிற்பம். எழுகடல்-உவாநீர், நல்நீர், பால்

தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன். ஒன்பதோடு ஒன்றனவாயு (பத்து வாயு) பிராணன் முதலிய தசவாயு.

பிராணயாமயோகமாவது இரேசக பூரக கும்பங்கள்ஆகிய மூன்றுவிதத்தால் பிராணவாயுவை நடத்தி செய்யும் யோகம் மற்றை ஏழும இயமமுதலியனவாம்.

ஏகாதசநதி கங்கை, யமுனை, சரச்சுவதி, நருமதை, காவேரி (இதன் பிரிவு கொள்ளிடம்) குமரி, கோதாவரி, சிந்து, தாமிரபருணி, துங்கைபத்திரி, கிருட்டிணி.

கடல்நீர் உண்டமை—தேவர் முதலியோர்கட்குத் துன்பமியற்றிக்கடலில் ஒளிததிருந்த ஓர அசுரனைக்கொல்ல கடல்நீரை அகஸ்தியன தன் உள்ளங்கையால அள்ளி ஆசமனியம் செய்தனன்.

வாதாபிவில்வலர்—இவ்விரண்டு சகோதரரில் வில்வலன் வாதாபியை ஆட்டினுருவமாககி அதைககொன்று உணவுசெய்து தன்னிடம வந்த முனிவாமுதலிய விருந்தினாக்கு ஊட்டி அவர்கள் உண்டபின் வாதாபீ என விளிபபன் அக்கணமே அவன் அவர்களது வயிற்றைக் கிறிக்கொணடு வெளியில தன பழய உருவுடன் வருவன். உணடவர்கள் இறந்தொழிவார்கள். இவ்வாறு இவர்கள் தங்கள் மந்திரசக்தியால் செய்வதையறிந்த அகத்தியன் அவர்கள் செய்யும விருந்திற்குசசென்று உணடபின வில்வலன சங்கேதப்படி வாதாபியெனஅழைததபோது அகத்தியன ஜீரணோபவ எனவே அவ்வாதாபி அழிநதனன்.

விந்தமடக்கினமை—ஓர காலத்தில் விந்தியபாவதம் அகங்கரித்து வான் அளாவி உயாந்து வழிவருவோாகருத் தடையாய் நிற்க அதுகண்ட அகத்தியன் அதிலேறித தன் தவவலிமையால் பாதாளத்தில் அடங்க அழுத்தினன்.

காவிரிநதிஉற்பத்தி.—சையபர்வதத்தில் தவஞ்செய்திருந்த அகத்தியனது கமணடலததிருந்த கங்கையை சீகாழிநந்தவனததிற்கு வேணடி விநாயகர் காகமாய்ச்சென்று கவிழத்தது. இது "கரகநீரைக கவிழ்த்த" என்பதனல் தோனறல் காணக. கவேரபர்வதத்தில் அல்லது கவேரராஜனுக்குப் புத்திரியாய் உற்பததியாயினமையின் காவேரி எனவும, பொறசன்ன முதலியவை உண்டாவதால் பொன்னியெனவும் கூறுப

ஈராறு—இரண்டுநதி. இவை, கொள்ளிடம், காவேரி.

13-நாடு—தென்பாணடி, குட்டம், குடம், கற்கா, வேண், பூழி, பன்றி, அருவா, அருவாவடதலை, சீதம, மலாடு, சோழநாடு ஆகிய இப பன்னிரண்டுடன செந்தமிழ்நாடொடு சோர்ந்தது.

14-வித்தை—வேதம்-4, வேதாங்கம் - 6, மீமாஞ்சை, தருக்கம், புராணம், தருமநூல் ஆகிய உபாங்கம்-4.

விண்டுஅம்சர்பதினைந்துபேர்=சனகன். சனந்தனன், சனாதன், சனற் குமாரன, நரநாராயணன், கபிலன், இடபன், நாரதன், அயக் கிரீவன், தத்தாத்திரேயன், மோகினி, யாகபதி, வியாதன், தன்வந்திரி, பௌத்தன். 55-ம் பக்கத்திற்கண்ட சனகனாதியர் இங்கு முதலிலுள்ள நால்வராம்.

16-உபசாரம்—தவிசளித்தல்-1, கைகழுவ நீர்தரல்-2, கால்கழுவ நீர்தரல்-3, முக்குடிநீர்தரல்-4, நீராட்டல்-5, ஆடைசாத்தல்-6, முப்புரிநூல்தரல்-7, தேய்வைபூசல்-8, மலர்சாத்தல்-9, மஞ்சளரிசிதூவல்-10, நறும்புகைகாட்டல்-11, விளக்கிடல்-12, கருப்பூரமேற்றல்-13, அமுதமேந்தல்-14, அடைகாய்தரல்-15, மந்திரமலரால் அருச்சித்தல்-16.

ஏழிசை—குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்.

18-புராணம்—மச்சியம்-1, கூர்மம்-2, வராகம்-3, வாமனம்-4, பிரமம்-5, வைணவம-6, பாகவதம்-7, சைவம்-8, இலிங்கம்-9, பௌடிகம்-10, நாரதீயம-11, காருடம்-12, பிரமகைவர்த்தம்-13, காந்தம்-14, மார்க்கண்டேயம்-15, ஆக்கினேயம்-16, பிரமாண்டம்-17, பதுமம - 18.

2-ம் பக்கம்.

வல்லரண் —737வது திருக்குறளின் உரையால் பொருள் கொள்க. 'ஸம்ஸ்ந்நிக்ருஷ்டராஜாந:' என்றபடி அரசண்மை எனற்குச் சமீபத்திருக்கும அரசன் என்க.

தம்பிமார்களாக என்னும் எச்சம் 3-ம் பக்கம் 12-ம் வரியில் பிறக்க என்பதைக் கொண்டு முடிகிறது.

3-ம் பக்கம.

மரக்காமுதலியநான்கையும் மாரபிலுள்ளவைகட்கும் தோள்கட்கும் ஏற்றவாறு கொள்க.

4-ம் பக்கம்.

எழுவாயாக......விளம்புகின்றேன்=இதில் எழுவாய் முதலிய சங்கேத பதமும் பயனிலையெனனும் முடிபும்வந்தன.

அகக்கருவி=மனம். புத்தி, சித்தம், அகங்காரம்.

சதுர்விதஉபாயம் சாமபேத தானதண்டங்கள்.

ஈரிரண்டு (4) புருஷார்த்தம்=தர்ம, அர்த்தகாம மோக்ஷங்கள்.

இவ்வாக்கியத்தில இயல்பு விகாரப்புணர்ச்சிகள், தோனறல், திரி

தல், கெடுதல்கள், எண்பெயர் முறைபிறப்பு உருவம், மாத்திரை, முதலீறிடைநிலை போலிபதம் புணர்ச்சிகள் முதல்சார்பு-இலக்கணம் இலக்கியம் வேற்றுமை அல்வழி என்னும் சங்கேதபதங்களும், பாவம, அறம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம விதிவிலக்கு என்னும் தத்துவ சங்கேத பதங்களும் வந்தன.

சதுர்வித அரண்: நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண்.

7-ம் பக்கம்

உயிர் துறந்த உடல்.—இராமன் பிரிவால் தசரதன் உயிர் நீங்கினதும் ஏனையோர் இருப்பை "உயிர்ப்பாரங் குறைந்துதேய-உடலை யொழியிலாவெனத்தோன்றும்" எனப பரதன் கூறியவாற்றையும் ஒருவாறு குறிக்கின்றது.

அஷ்டாங்கம்.—கைகள், கால்கள், தோள்கள், மார்பு, நெற்றி எனறும் எட்டுவித அங்கங்களாற் செய்யும் வணக்கம்.

8-ம் பக்கம்.

அநுமான் நிறத்திற்கு" பொன்னை ஒப்பாய்" எனவும்" ஒதமொத்தனன்மாருதி" எனவும் கம்பநாடர்வழங்குதலாலும் உலகில் ஓவியர் பசசைநிறமாக எழுதுவதினாலும் பொனமலை எனவும் கரியமலை எனவும் பொருள் படுமாறு கருமலை என எழுதப்பட்டது.

9-ம் பக்கம்.

கிட்கிந்தை.—இது மைசூருக்குவடக்கில் இருப்பதென்பார் சிலர்.

நவமணி.—கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம என்பனவாம்.

10-ம் பக்கம்.

கொல்லை..... ஒல்காது (நாலடி). கொல்லையாகிய பெரியபுனத்திலுள்ள மரககட்டையைச் சேரமுளைத்த புற்கள் உழவர்கள் கலப்பைகருத் தளாவு அடையாதனவே யாகும்.

11-ம் பக்கம்.

சினமென்னும்.......புணையைச்சுடும் (குறள்). சினமென்னும் நெருப்பு, தனக்கு இடமானவரையே யன்றி அவர்க்கு இனமாகிய காவலாளரென்னும் தெப்பத்தையும், சுடும.

12-ம் பக்கம.

வினைவலியும்............ .. செயல் (குறள்.)

தான் செய்யநினைத்த வினையின் வலியும் அதனைச்செய்து முடிக்கும் தனது வலியும் அதனை விலக்கவரும் பகையின் வலியும் இருவர்க்கும் துணையாவார் வலியும் சீர்தூக்கி அவ்வினையைச் செய்க.

உரம்.—பலம், பாதி கொள்ளும்பான்மை, பூர்வம் வாலிக்கு இந்திரன் கொடுத்த ஏமமாலிகையின் மகாத்மியத்தால் வந்தது.

அஷ்டமூர்த்தி.—பூமி, நீர், தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா ஆகிய உருவமா யிருப்பவர்.

அஷ்டதிக்கு —கிழக்கு, தெனகிழக்கு,தெற்கு,தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு.

கார்த்தவீர்யார்ச்சுனன்.-இராமன் மரபிற்பிறந்தவன், இவன் பரசுராமனது தந்தையைக் கொன்றமையால் அவனாற்கொல்லப்பட்டான்.

13-ம பக்கம்.

நுண்ணறி ....பேதமைத்தே.—நுட்பமான அறிவுடையவர்களாற் செய்யபபட்ட சாஸ்திரஙகளைக கற்றுங் கேட்டும பழகியுமிருந்தினும் பெண்களது அறிவு மிகப் பேதமையுடையதாம்.

15-ம பககம்.

ஒட்டிய .... ...வீடுளார் (இராமாயணம்.)

சேனையோடு கூடிய பகைவரால் கோபிககப்பட்ட போர்முகத்தில் சென்று போாசெய்து இறவாதவரும் மேலான ஞானம சித்திக்கப்பெற்றுத் தெளியாதவரும அஷ்ட ஐசுவரியமும் அநுபவிப்பது இவ்வுலகத் தளவிலேதானென்று அவற்றைவிடாதவருமாகிய இவாகளில் எவா மோட்சசுகம் பெற்றவா (ஒருவருமில்லை என்றபடி.)

18-ம பககம

அஷ்டகுலபர்வதம்.—கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம, நீலகிரி, கந்தமாதனம் ஆக எட்டாம்.

23-ம் பககம.

* புலி . ஆண்டவன், விற்பிடித்து...காத்தோன், * இவ்விருவர் பெயரையும் இராமாயணத்தில் கம்பர் இவ்வாறே கூறியுள்ளார். பறவை பாலித்தோன, சிபி. இவாகள் உபகாரம் நீதி இவற்றைபபற்றி இங்கெடுத்துரைககப்பட்டனர்.

## சூரியவம்சத்தரசர்கள்.

| | | |
|---|---|---|
| சூரியன் | பிருது | மாந்தாதா |
| வைவஸ்வதன் | திரிசங்கு | சுசந்தி |
| இக்ஷுவாகு | அரிச்சந்திரன் | துருவசந்தி |
| குக்ஷி | ரோகிதாசியன் | பிரசேஜித்து |
| விகுக்ஷி | குவலயாசுவன் (துந்துமாரன்) | பரதன் |
| பாணன் | | அசிதன் |
| அநரண்ணியன் | யுவநாசுவன் | சகரன் (சகரர்-60000) |

| | | |
|---|---|---|
| அசமஞ்சன் | சங்கண | நகுஷன் |
| அம்சுமான் | சுதாசனன் | யயாதி |
| திலீபன் | அகனிவருணன் | நாபாகன் |
| பகீரதன் | சீக்ரகன் | அசன் |
| ககுஸ்தன் (புரக்ஞன்) | மரு | தசரதன் |
| ரகு | பிரசுச்ருகன் | ஸ்ரீராமன் |
| கலமாஷபாதன் | அம்பரீஷன் | |

இங்கு எழுத்துச் சொற்பொருள் யாப்பு அலங்கார மென்பன வந்தன.

பெயர்ப்பதுபதமந்திரம்.—ஆள்களைச் சிநேகத்தினின்று பிரிக்கும் மொழிகளையுடைய யோசனை. கூனி என்பதே பெயர்ப்பகுபதமாமாறு காண்க.

சிபிச்சக்ரவர்த்தி.—இவன் தன்னிடத்து அடைக்கலமென வந்த புறாவைக் காக்கும்படித் தனனுடலை அதற்கீடாகத் தராசுத்தட்டில் அரிந்துவைத்தும் போதாமையால் தானே அதிலேறினவன். புறா அக்னி அம்சம், அதனை அடித்ததாகத் தொடாந்துவந்த வேடன் சிவபெருமான்.

பகீரதன்—இவன் தன் முன்னோர்கட்கு மோட்சமுண்டாம்படி ஆகாய கங்கையைப் பூமியிற்கொணரப் பிரமன், சிவன், கங்காதேவி இவர்களைநோக்கி அளவில்லாத தவமியற்றினன்.

24-ம் பக்கம்.

"தேனென்றுதண்ணந்துளவோன்றவர்செப்புசாபம்
தானென்றிநிற்பத்தகைசெய்துமயக்கலாலே
கானென்றுவேடன்சரனென்பவன்காட்டின்மேய
மானென்றுதாளிஒருவாளிவழங்கினனல்" எனும் திருவிருத்தத்தால் கிருஷ்ணன் தன்னடிச்சோதிக் கெழுந்தருளினமை காண்க.

26-ம் பக்கம்.

இங்கு ஏழு எண்கள் தொடர்ந்த வாக்கியம் வந்தது.

கோழுகோம்பு எனவும் கொள்கொம்பு எனவும் வழங்கும். முன்னதற்கு பயிர்செழித்தற்குக் காரணமான கோல். பின்னதற்கு தன்னை ஏற்றுக்கொள்ளும் கோல் என்க.

27-ம் பக்கம்.

தனக்கின்னா இன்னாபிறர்க்கு—தனக்கு எது துன்பமோ அது பிறர்க்கும் துன்பமாகும் பிறர்க் .. .வரும்-முன்பு ஒருவர்க்குத் தீமைசெய்தால் பின்பு அத்தீமை தனக்கேவரும். இங்கேசங்கேதமொழிகளுள.

28-ம் பக்கம்.

செய்வானை.... .......செயல் (குறள்.)

அரசன் தொழில்செய்பவனையறிந்து பின் அத்தொழிலையறிந்து காலத்தோடு பொருந்த உணர்ந்து அவனை அத்தொழிலிலவைத்து ஆளக்கடவன்.

29-ம் பக்கம்.

எண்வகைமணம்.—எட்டுவிதவிவாகம். அவை பிரமம்-1, பிரசாபத்தியம-2, ஆரிடம்-3, தெய்வம்-4, காந்தர்வம்-5, ஆசுரம்-6, இராக்கதம்-7, பைசாசம் 8-என்பன.

செய்பவன்...........வினை.

இந்நன்னூற் சூத்திரம் வேறுபொருளில்வந்தமை காண்க.

30-ம் பக்கம்.

நன்னிலை ....... .. தான.

நன்மையாகிய நிலையில் தனனை நிறுத்தவல்லவனும் தன்னை நன்னிலையினின்று தவறுதல்செய்து தீயநிலையில் இருத்தும் மெல்லியனும் நன்னிலையினின்றும மேலும் மேலும் உயரச்செய்து நிறுத்தவல்லவனும் தன்னை யாவரினும் முதன்மையுள்ளவனுக்ச் செய்யவல்லவனும் தானே ஆம் —எ-று.

நன்னிலையில் தன்னை நிறுத்தல்முதலிய மூன்றுக்கும் நன்முயற்சியும் கீழ்ப்படுதலுக்கு அஃதில்லாமையும் காரணமாயினும் அவற்றையறிந்துசெய்தலும் செய்யாதுதவறுதலும் தானுதலால் அவன் மேல்வைத்துக்கூறினா.

31-ம் பக்கம்.

நூற்............. குணம்.

இவைகள் நன்னூற் பொதுப்பாயிரச் சூத்திரத்தால் நன்கு விளங்கும்.

அவற்றுள்நிலம்........... மாட்சி.

நிலத்தையும், மலையையும், நிறைகோலையும், மலரையும் ஒத்தபெருமை எனக்கொள்க.

நா.. பதிః—விஷ்ணு அம்சம் அலலாதவன் அரசன் ஆகான்.

அம்முதல்வன்.—இங்கு அகரம் விசேஷணப் பொருளது முதல்வன்—தலைமையன் என்க.

32-ம் பக்கம்.

ஆக்கல் அழித்தல் ஆதி என்றது சிருட்டி சங்காரங்கட்கு தலைமையை. 2, 3, 4, 5 ம்-வேற்றுமைப்பொருள்களும்,6,7-ம் வேற்றுமை

களும்,நன்னூல் 2-ம் வேற்றுமைப்புணர்ச்சிக்குரிய புறனடைச் சூத்திர த்திற் பெரும்பான்மையும்,வேற்றுமைப் புணர்ச்சிக்குரிய தொழிலமு தலிய 14-விதமும்வந்தன. 33-ம பக்கத்திலும் அவற்றிற் சில உள.

33-ம் பக்கம்.

நன்னூல் கீழின்முன் வன்மை விகற்பமுமாகும் என்றபடி தன் னிடத்துளது என்றனன். உணடுகுணமிஙகொருவர்க்கெனினும் கீழ் கொண்டுபுகல்வதவர் குற்றமே என்பது நன்னெறி

34-ம் பக்கம.

மருந்து, மலையிலிருக்குமென்பது உத்தேசம். நல் நலம் இது ஒரு பொருட் பன்மொழி.

35-ம் பக்கம்.

ஒல்லா என்பதற்கு "ஒல்லும் வாயெல்லாம் வினைநன்றே யொல் லாக்கால் செல்லும் வாய நோக்கிசசெயல்" என்ற திருக்குறளில் இய லாத எனனும் பொருள்படுதலின இங்குபிறாக்குப் பொருநதாத எனக் கொள்க.

39-ம் பக்கம்.

பேறிள ....லமைப்பு —ஐசுவரியமும், இளமையும், சுகமும், நோயும், கிழத்தனமும், மரணமும ஆகிய இவ்வாறும் கர்பபத்திலே யே அமைந்துவந்தன.

40-ம் பக்கம்.

கன்னிகைகள் ஐவராவா அகலிகை,திரௌபதி,சீதை, தாரை, மண்டோதரி இவர்களாம்.

46-ம் பககம்.

மொழிமாற்றுப் பொருள்.—மாறுபாடான பொருளையுடைய சொல்லை என்க விற்பூட்டவேண்டுமா வில்லைவளைத்து நாணபூட்டுத ல், அது நின்மேல் அம்பு தொடுக்கவேண்டுமா என்று குறிப்பிததபடி.

47-ம் பக்கம்.

மூன்றுவிதபயங்கரம்.—முன்னே சுக்ரீவன், இராமலட்சுமணர் களை வாலியேவலொன எண்ணி யொளித்த பயமும, என்றும் தனக் கிருந்த வாலியின் பயமும், மதுவுணடு காலந்தாழததனிேல் இலககு மணன்வருகையைககணடு பயநத பயமுமென்க.

48-ம பக்கம்.

கண்டுவந்தேன் எனவும் கண்டு உவந்தேன் எனவும் பொருளாம.

அதிமதிநுட்பம்.—அளவிறந்த புத்தியும் நுட்பமும் என்க.

50-ம் பக்கம்

எழுவர் —இராமன்-1, பரதன்-2, இலக்குமணன்-3, சத்துருக் கன்-4, குகன்-5, சுக்ரீவன்-6, விபீஷணன்-7.

51-ம் பக்கம்.

வசந்தனைப்பற்றியது சில இராமாயணங்களில் இன்று.

54-ம் பக்கம்.

வேற்றுமை 5-ம் அல்வழி 14-ம் வந்தன.

மானுஷவருஷம் ஒன்று ஆனால் அது தேவர்கட்கு ஓர்நாள். அந்நாள் 360-ஆனால் அவர்கட்கு ஓர் வருடம். அவ்வருடம 12000-ஆனால் அவர்கட்கு ஓர்யுகம். இவ்யுகம் 2000-கொண்டதே பிரமகலபம். இதுவே அவனுக்கு ஓர்நாள். இதுவரையும் சென்ற மனுக்கள். (1) சுவாயம்பு (2) சுவாரோசிடன் (3) உத்தமன் (4) தாமதன் (5) ரைவதன் (6) சாக்ஷுசன. இப்போதுள்ளமநு வைவசுதன். இனிவருபவர் சாவர்ணி, தக்கசாவர்ணி, பிரமசாவர்ணி, தருமசாவர்ணி, உருத்திரசாவர்ணி, தேவசாவர்ணி, இந்திரசாவர்ணி இவர்களே.

55-ம் பக்கம்.

" தேன்றருதொடையாய்முதலெனுமூழிசேர்தரினறமெனும்வள்ளே
நான்றிடுநானகுபாதமுமிரண்டாமூழியிலொருபதம்வாங்கி [ம்
மூன்றெனமொழிவாாமொழிநதிடுமூழிமூனறினிலிரண்டுதாளுமொன்று
என்றிருங்கலியிலொருபதமூன்றுமிலங்குமிததனைமிசையன்றே"

என்ற திருவிருத்தத்தால் கலியில் தர்மம் ஓர்பாதத்தால் நடக்குமென அறிக.

ஆயிரம்.... .......,வடிக்கும்.

இதற்கு முன்கூறிய வகைகளால் பொருள்கொள்க. இராமன் அவதரித்த தினம் முதலியவைகள் 1864-ம் வருஷம்பதிப்பித்த இராமாயணவசனத்தில் கவர்மென்ட் நார்மல்பாடசாலே தமிழ்ப்பணடிதராயிருந்து காலஞ்சென்ற ஈ. ஸ்ரீனிவாசராகவாசாரியரால் எழுதப்பட்டன. அதன்படி 5ம் திரேதாயுக மானல் இதுவரையில கணக்கிடும்போது வருஷம் 100552972-ஆகின்றன இச்சதுர்யுகத்தில சென்ற திரேதாயுகமானல் 1192972-வருஷம் ஆகின்றன. (இககாலததில் இந்துதேச சரித்திரம் எழுதின Sir. W. W. Hunter-சுமார் B C. 1000-வருஷமென்றும், Sir William Jones B.C. 2029-எனறும கூறுகினறனர்.) பாகவுதத்தில் சென்ற ஆறு மநுக்கள் காலத்தில் நிகழ்ந்தவைகளே இறந்தகாலத்தாலும் 7-ம் மநுவின்காலத்தில்நிகழுகினறவைகளே நிகழ்காலத்தாலும் மற்றைய மநுககள் இன்னின்னார் வருவார் என எதிர்காலத்தாலும் கூறுகின்றமையால் நிகழும் சதுர்யுகத்தில் சென்ற திரேதாயுகம் என ஊகிக்கலாம்.

அருளோடு பதின்மூன்றய ஆயிரம்பருவம் என்றது பதினொன்றயென இருக்கும் போலும்.

56-ம் பக்கம்.

இரண்டு திருவிருத்தமும் 7-ம் மநுவாகிய வைவசுவதன் இக்ஷுவாகு முதலிய பதின்மரைப்பெற்றதும் இக்காலத்தில் இந்திரன் சுவர்க்கத்தை யாள்வதும் ஜமதக்னி முதலியவர்களே சப்தரிஷிகளாயிருப்பதும் விஷ்ணு, வாமனரூபமாய் மகாபலியிடத்துப்போய் மூவடிமண் யாசித்ததும் கூறுகின்றன.

57-ம் பக்கம்.

ஜாதகபாவம் —ஜன்மம், குடும்பம், சகோதரம், மாதுரு, புத்ரன் சத்ரு, பெண்டிர், ஆயு, பிதுரு, பிரபு, லாபம், மோக்ஷம், எனனும் 12 பாவம் ஆம்.

அநுமன் வானிலெழும்போது வாயு துணைசெய்தனனெனவும், சூரியன் குளிர்ந்து தோன்றினனெனவும், சூரியனருகுவந்த இராகுவின்மேற்பாய அவ்விராகு இந்திரனிடஞ்சென்று முறையிட்டனனெனவும், அயிராவதத்தின் மேற்பாய்ந்தனனெனவும் கூறுப.

60-ம் பக்கம்.

நாடிய .... கூறுவோர்க்கே.—தாடகை முதலிய இராக்ஷதர்களது மிகுந்த சேனசமுத்திரங்களைத் தூளியாமபடி வென்று வெற்றிமாலைதரித்த கோதண்டமேந்திய இராமனது புயபராக்கிரமத்தைச் சொல்பவர்களுக்குக் கல்விப்பொருளும் செல்வப்பொருளும் (இவற்றால்) ஞானமும் கீர்த்தியும் உண்டாகும். உண்டாகவே மோட்சத்துக்கு வழியை உண்டாக்கற்கு ஏதுவான மணம்பொருந்திய கமலபீடத்தி லெழுந்தருளிய இலக்குமியானவள் கடாக்ஷிப்பள் எ-று.



# சுக்ரீவபயநிக்ரகம்.

## அரும்பதவிளக்கவகராதி.

### அ

அகக்கருவி-மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.

அகம்-உள்ளம்.

அகலம்-மார்பு.

அகல்யாசோர துச்சவனன்புத்ரா - அகலிகையைக் கற்பழித்தவனும, சவனமுனியால் அவமதிக்கபபட்டவனுமாகிய இந்திரன்புத்திரனே

அங்கவியல்-அரசியல் நடததலில் ஒன்றற்கொன்று துணையாகிய ஆறு அங்கஙகளின இயலபு இது திருக்குறளி லமைச்சுமுதலிய 32-அதிகாரங்களால் கூறபபடுவது.)

அகிலம-உலகம்.

அசுவம்-குதிரை.

அஞ்சல்-எதிர்மறை ஏவல் (பயப்படாதை)

அஞ்சன்மின்-பயப்படாதிருங்கள்.

அடாவழி-தகாதவழி

அணிகலம்-ஆபரணம்.

அணுகின-நெருங்கின.

அணணல்-பெருமை.

அணமிய-சேர்ந்த.

அதிவிருஷ்டி-அதிகமழைபெய்தல்

அதீனம-வசம்.

அத்தன்-தந்தை.

அநகன்-பாபமில்லாதவன்.

அநாதரக்ஷகன் - ஆதர வற்றவர்களைக்காப்பவன்.

அநாவிருஷ்டி-மழை பெய்யாமை

அநுசன்-தம்பி.

அநிலன்-வாயுதேவன்.

அந்தரம்-வித்யாசம·

அந்தோ-ஐயோ.

அபயப்பிரதானம்-அபயம், அஞ்சாமை.

அபிதானம்-பேர்.

அப்புமாரி-ஜலவருஷம்.

அமலம்-பரிசுத்தம.

அமிர்தோததி-பாற்கடல்.

அமிருதது-சாகாமை.

அமுதம்-நீர்.

அமைச்சு-மந்திரி.

அம்சதூலிகாமஞ்சம் - அன்னத்தின் இறகால் அமைத்த அமளி.

அம்பிகாபதி-சிவன்.

அம்புராசி-சமுததிரம்.

அம்பு-நீர.

அயக்கிரீவன்-விட்டுணு,

அயலிடம்-வேறிடம.

அயன்-பிரமன.

அயிாத்து-சந்தேகித்து.

அரவிந்தநணபன்-சூரியன்.

அரி-குரங்கு

அரிதுணாபொருளன-அரிதாகக் கற்றோரால் அறியும் பொருளினை யுடையவை.

அரிதிரம்-துனபம்.

அரிநதமன-விட்டுணு.

அரில்-குற்றம.

அரிவை-மனைவி.

அருக்கியம்-பூசைக்குமுன் கையில் கொடுக்குமநீா.

அருத்தி-ஆசை.

அருநதி-உணடு.

அருந்திறல்-பிறர்க்குக் கிடைத்தல் அருமையான வலிமை.

அருமந்த - அருமையான மருந்தை யொத்த (இது மரூஉ.)

அரைகடையிட்ட - அரையைக் கடைசியிலவைத்த.

அலகில-அளவில்லாத.

அலங்காரம்-அழகு, ஓர்நூல்.

அலகைக்கணம்-பேய்க்கூட்டம்.

அலம்வந்தோடின-சுழன்று ஓடின
அல்லல்-துன்பம்.
அவம்-வீண்.
அவத்தம்-வீண்.
அவலம்பித்தல்-அநுசரித்தல்.
அவாங்மனோ கோசரம்-வாக்குக்கும் மனதுக்கும் எட்டாமை.
அவாப்தசமஸ்தகாமன்-சகலமானமனோரதங்களையுமுடையவன்.
அவிச்சை-ஆசை.
அவுணன்-அசுரன்.
அளவளாவிநின்றும்-(ஸ்ரீவராகமுதலியனவாகக்) கலந்தும.
அளவு-வரையறை.
அளாவி-கலந்து.
அளித்து-கொடுத்து.
அறத்தின்அல்வழி-பாபம்.
அறத்தோர்-தருமவழியி னிற்போர்.
அறிதுயில்-யோகநித்திரை.
அறுதி-முடிவு
அறைகூவல்-போர்க்கழைத்தல்.
அனந்தரம்-பின்பு.
அன்னதகைத்து-அத்தன்மையது.
அன்னவூர்தி-பிரமன.
அஸ்தபரிசம்-கையால்தொடுதல்.
அஃகுதல்-ஒடுங்குதல்.

ஆ

ஆகண்டலன்-இந்திரன்.
ஆகண்டலி-இந்திரன்மகன் (வாலி)
ஆகம்-தேகம்.
ஆகவம்-போர்.
ஆகாயமணி சூரியன்.
ஆசுகம்-பாணம்.
ஆசை-அன்பு, திக்கு.
ஆச்சந்திரதாரகம்-சந்திரனும் நக்ஷத்திரங்களுமிருக்கும்வரையில்.
ஆடல்-வலிமை.
ஆணி-ஆதாரம் (உரை ஆணி.)
ஆதவன்-சூரியன்.
ஆதிசங்கற்பம் - முன் செய்துகொண்ட ஏற்பாடு.
ஆபத்பாந்தவன்-ஆபத்துக்காலத்தில் உதவிசெய்பவன்.
ஆம்பல்நண்பன்-சந்திரன்.
ஆர்கலி-கடல்.
ஆர்வலர்-பிரியர்.
ஆரவாரிப்பு-ஓசை.
ஆரியன்-அறிஞன், குரு, ஐயன்.
ஆலம்-விஷம்.
ஆலமர்க்கடவுள்-கல்லாலவிருக்ஷத்தின்கண் எழுந்தருளிய சிவபிரான்.
ஆவம்-அம்பருத்தூணி.
ஆழி-சமுத்திரம.
ஆழியசலம்-சக்கிரவாளபர்வதம்.
ஆளி-சிங்கம்.
ஆற்றல்-வலிமை, சாமர்த்தியம்.

இ

இகல்-யுத்தம்.
இகவா-நீங்கா.
இகவாமையின்-போகாததினால்.
இகற்கு-போருக்கு.
இடுக்கண்-துன்பம.
இசை-கீர்த்தி.
இடு-இட்ட.
இடை-நடுவில்.
இடைக்குறை-மத்தியில்செய்த தப்பிதம்.
இடைநிகர்வு-பொது.
இடைநிலைமயக்கம்-நடுவில்தன் நிலைவேறுபடுதல் (கூடுதல்.)
இடையது-நடுவிலுள்ளது (வழக்கு)
இடித்து-தாழ்வுசெய்து.
இரட்டுற-இரண்டுபொருள்பட.
இந்திரதிசை-கீழ்த்திசை.
இந்திரவாகனன்-கருஸ்தன்.
இந்து-சந்திரன்.
இயல்பின்விகாரம் - நாரசிங்கம்முதலியன.
இரணரங்கம்-யுத்தகளம்.
இராவணி-இந்திரசித்து.
இரியல்-ஓடல்.
இரேசகம - பிராணவாயுவை விடுதல்.
இலம்-மனைவி
இலேகர்கள்-தேவர்கள்.

இல்-மனைவி, இன்மை.
இலலாடம்-நெற்றி.
இல்லென்போா இல்லையென்பவர்.
இவர்ந்து-ஏறி.
இழுக்கு-குற்றம்.
இழை-ஆபரணம்.
இளவல-தமபி.
இறும்பூது-மலை, ஆச்சரியம்,
இறைமகனை-அரசன.
இறை-வரி.
இற்ற-இறந்த
இன்பாம-இன்பமாகிய.
இனம்-சுற்றம்.
இன்னணம-இன்னவண்ணம்என்ப
இன்மரூஉ.

ஈ

ஈண்டிய-கூடிய.
ஈரம்-குளிர்சசி.
ஈழம்-பொன.

உ

உகிர்-நகம்.
உகும்-சிநதும்.
உகைததல-செலுத்தல்.
உக்கு-பொடியாயுதிர்ந்து.
உசாவி-வினவி, (கேட்டு)
உஞற்ற-செய்ய.
உடன்று போர்செய்து.
உடுநிரை-நக்ஷத்திரவரிசை.
உடுபதி-சந்திரன்.
உதகம்-ஜலம.
உதரம-வயிறு,
உதவி உபகாரம்,உபகாரஞ்செய்து
உதிரம்-இரதத்ர.
உந்துதல்-பிரயோகித்தல்.
உபநிதி - கணக்கிடாமல் முத்திரை செய்துஒளிதது வைககககொடுத்தபொருள். [தி
உபயவிபூதி-நித்யவிபூதி, லீலாவிபூ
உபயாநதரம-வேறுமுயற்சி,
உம்பர்-தேவர்.
உம்மை மறுமை.
உயிர்த்தலம-உயிர்இருக்குமிடம்.
உரம்-பலம், அறிவு,
உரன்-அறிவு.
உரன்முதல்-வலியின்மூலம்.
உரிமை-மனைவி, சுதந்தரம்.
உருதது-கோபிதது.
உருபு-உருவம்.
உருமு-இடி.
உருவு-ரூபம்.
உலாபபோதல-உலாவுதல்.
உலாய்-நடந்து.
உலோபம்-உபகாரமின்மை,
உவத்தல்-சநதோஷித்தல்.
உவபபுஅனமொழி-கடுஞ்சொல்.
உழுவை-புலி.
உற மிக.
உறபசி-மிககபசி.

ஊ

ஊறு-காயம்.

எ

எச்சம்-குறை.
எஞசாத-குறைபடாத.
எணணியாஙகு-நினைத்தபடி.
எண-எட்டு எணுமதொகை,எண் எனனுமேவல.
எய்திய-அடைநத.
எரி-நெருபபு.
எருவை-கழுகு.
எழிலி-மேகம.
எழு-ஸ்தம்பம்.
எழுவாய-தலைமை.
எறழ்வலி மிககவலி
எற்றிறகு-எதற்கு.
எனறூழ-சூரியன்.

ஏ

ஏஙகுறறு-ஏங்கி.
ஏன்று-ஏற்று.

ஐ

ஐ-சுவாமி.
ஐநதவிதது-சப்தஸ்பரிசரூப ரசகந்தஙகளால வரும ஆசைகளைத தவிர்த்து
ஐம்பாலோதி-ஐந்துவிதமாய் முடிக்குஙகூந்தலையுடையசீதை.
ஐயம-சநதேகம்.

ஒ

ஒருங்கு-முழுமையும்.

ஒருமை-ஒருதன்மை.
ஒருமொழி-சத்தியவார்த்தை, பிடிவாதவார்த்தை.
ஒன்னுரு-அழகிபருபம்.
ஒழிபியல்-அரசியலிலும், அங்கவியலிலும் அடங்காதவைகளின் இயல்பு இதுகுடிமைமுதலிய13அதிகாரங்களால்கூறப்படுவது)
ஒழிவு-அல்லாதவை.
ஒறுத்தல-தண்டித்தல்.
ஒற்றா-தூதர்.
ஒனறன்கூட்டம்-ஒருஜாதி.

ஓ

ஓங்கல்-மலை.
ஓங்குஇடம்-உயர்ந்ததானம் (மோக்ஷம)
ஓடை-குளம்
ஓதை-ஓசை.
ஓம-ஆகட்டும் (ஆகுக.)
ஓம்புதல்-காத்தல்.
ஓவாப்பிணி-நீங்காதபிணி.
ஓரம்-பக்ஷபாதம்

ஔ

ஔவியம்-பொருமை.

க

ககநம்-ஆகாயம்.
கங்குல் இரவு.
கஙகைதந்தோன்-பகீரதன்.
கடல்தொட்டோர்-சகரர்.
கடுக்கும்-ஒககும
கடைக குறைப்பட்டனே-கடைசியில்நீயேகுறைக்கப்பட்டாய்.
கடைப்பிடியாமை - உறுதியாகக்கொள்ளாமை.
கடையது-தணடனே.
கட்டது-கொன்றது
கட்டளைக்கல்-நிறைகல்
கட்டுரை-சத்திய வசனம்.
கண்கூடு-பிரத்தியக்ஷம.
கண்டகன-முட்போன்றவன் (பாதகன்.)
கண்டம்-கழுத்து.
கண்ணிய-நினைத்த.
கண்ணுற்ற-பார்த்த.
கண்ணோட்டம்-தாக்ஷிணியம்
கதவம்-கதவு அம்சாரியை.
கதனம்-யுத்தம்.
கதைத்து-சொல்லி
கதிரமகன-சனி, சுக்ரீவன்.
கந்துகம-பந்து.
கமணடலம-ஓர்பாத்திரம்.
கமா-பூமிவெடிப்பு.
கமனம-வேகம்.
கரதலாமலகம் - உள்ளங்கைநெல்லிக்கனி.
கரநது-ஒளிந்து
கரம-கை.
கருவி-ஆயுதம்.
கருவிளை-காக்கணம்பூ.
கரைவது-அழுதல
கர்மவசியம-காமத்தின்வசமாயிருப்பது
கலன-ஆபரணம்.
கலினம-கடிவாளம.
கலுழ்தல் வருந்துதல்.
கலைகம்-மலையிடம்.
கல்லுவான்-களையும்படி.
கவனம்-வேகம்.
கவுள-கன்னம்.
கவ்வை-துன்பம்.
கழல-வீரகண்டை, பாதம்.
கழலை தேகத்திற்றோன்றும்கட்டிப்புண.
கழறுதல்-சொல்லுதல்.
களிபபு-சநதோஷம்.
களேபரம்—உடல்.
களைகட்ட-களையெடுத்த.
களைய-போகக.
களைகண்-ஆதாரம்.
கறுத்து-கோபித்து, கறுப்பாகி.

கா

காசினி-பூமி
காடின்யம-கடினம்.
காணடிகை-காணப்படும்திசை, ஒரு உரை.
காண்டவனன்-இந்திரன்.
காத்திரம்-தேகம்.
காதிசேய்-விசுவாமித்திரன்.

காரகம்-இருள்அடைந்தமனம் - வினையாலமுடிவுபெறுவது.
காரியம் - சீதையைத்தேடுமீ காரியமெனவும் அந்தியகாரியமெனவும பொருள்படுமாறுகாண்க.
கார்-மேகம்.
காலவழு-காலம்தவறுவது,
காலன்-யமன்
காலைககதிர்-சூரியன்.
கால்-காற்று, வாய்க்கால்.
கான்-காடு
கான்முளை-பிள்ளை
கான்று-வெளியிட்டு.

கி

கிழமை-சம்பந்தம, உரிமை.
கிளர்ச்சி-மனவெழுச்சி.
கிளத்தல்-சொல்லல்.

கீ

கீசகம்-குரங்கு
கீண்டு-பிளந்து.
கீழின்முன வன்மை-கீழோனிடத்துள்ளவல்லமை.
கீழ் - கீழானவன (இதுஎழுவாய்த்தொடா)

கு

குசலப்பிரச்னம-க்ஷேமம் விசாரித்தல்
குஞ்சரம்-யானை.
குடக்கோடுவான்-சூரியன்,
குதூகலம்-சந்தோஷம்.
குமார்க்கம்-தீயவழி,
குமைத்தல்-அழித்தல்.
கும்பகம்-சமப்படுத்தியடக்கல்.
குருளை-குட்டி.
குழவி பிள்ளை.
குழீஇ-கூடி.
குழு கூட்டம்.
குறிப்புவினை-குறித்தகருமம்.
குறுமுறுவல்-புன்னகை
குறும்பர்-துற்சனா குறுநிலமன்னர்.

கூ

கூடிமேம்படல்-சேர்ந்துமேன்மைப்படல்
கூப்பாடு-அழைத்தல்.
கூலம்-கரை.
கூருமை-சொல்லாதிருத்தல்.
கூற்று-யமன்.

கே

கேசரி-சிங்கம், அநுமன்தந்தை.
கேண்மை-சிநேகததன்மை.
கேண்மோ-கேள், மோ முன்னிலை அசைச்சொல.
கேள் ஒளி.

கை

கைமிகுந்த-அதிகரித்த.
கைம்மாறு-பிரதிஉபகாரம்.
கைவருதல-பழகுதல்.

கொ

கொணர்வல்-கொண்டுவருவேன்.
கொம்பா கொம்பு (ஈற்றுபபோலி)
கொல்-ஐயப்பொருள்தரும் இடைச்சொல்.

கோ

கோடல்-கொள்ளுதல்.
கோல-பாணம்.
கோறல்-கொல்லுதல்.

கௌ

கௌவை-துன்பம்.

ச

சங்கிராமம்-போர்.
சசம-முயல்
சட்குணம்-ஆறுகுணம்.
சதகூறு-ஆயிரமபங்கு.
சதாகதி-காற்று.
சதுஷ்பாதம்-நாற்காற்பிராணி.
சமயத்துக்கேற்றகாரியம்-சமயோசிதயுத்திவார்த்தை.
சமரம்-யுத்தம்.
சமர் போர்.
சமன யமன், நேர்மை.
சமீரணன-வாயு
சமூகம்-கூட்டம.
சமஸ்லேஷம-கூடுதல்.
சம்பாதி-கழுகு அரசன்.
சரணாகதரக்ஷகர-அடைக்கலமாய்வந்தவாகளைக் காபபவன.
சரண்-பாதம்.
சரதம்-சத்தியம்.

சரமகிரியை-தேகாந்தத்தில் செய்யு ம்சடங்கு
சராசனம வில்.
சர்ப்பாமசர்-சேஷாம்சர் (இலட்சமணன்)
சர்வாந்தர்யாமி - எல்லா வஸ்துக்க ளினுள்ளிருப்பவன்.
சவம்-பிணம.
சவி-ஒளி
சவிஸ்தாரம்-விஸ்தாரம்.
சலதரம-மேகம்.
சன்னதம்-ஆவேசம்.

சா

சாகசம்-அசாத்தியமானதைச் செய்தல்.
சாகரம்-கடல்
சாகாடு-பண்டி, (சகடம்)
சாகாமிருகம்-கிளையிலுள்ள மிருகம் (குரங்கு)
சாக்காடு-மரணம்.
சாபம்-வில், சபித்தல்.
சாம்பினன்-செத்தனன்.
சாம்புற-சாக.
சாயகம்-அம்பு.
சார்த்தூலம்-புலி.

சி

சிங்கம்-ஆவணிமாதம்.
சிதம்-நக்ஷத்திரம்.
சினந்து-கோபித்து.
சிவணுதல்-ஒப்பாதல்.
சினை-கிளை.

சீ

சீமூதம்-மேகம்.
சீயம்-சிங்கம்.

சு

சுடலை-மயானம்
சுதாசனம-திருமால்சக்கரம்.
சுபாஷணம்-நல்வசனம்.
சுபிக்ஷம்-நல்லகாலம்.
சுவேலை இலங்கையின் பக்கத்துள் ளஓர் பாவதம்.
சுள்ளி-விறகு.

சூ

சூசனம்-சுருக்கம்.
சூள்-சத்தியம்.
சூக்ஷமம்-நுட்பம்.

செ

செக்கர்-செவ்வானம்.
செந்நீர-இரத்தம்.
செரு-உயுத்தம்.
செவ்வன்-செம்மை.
செவிச்சொல் ஒருவர்காதில் ரகசியமாய்ச்சொல்லல்.
செவ்வி காலம.
செவ்விது-க்ஷேமம்.
செவ்விய-அழகிய.
செவ்வியல்-நல்லதன்மை.
செறுநர்-பகைவன்.
செறுபகை-புறத்திலிருந்துவந்து அழிவுசெய்யும் பகை.
சென்னி-தலை.

சே

சேதாம்பல்-சிவந்தஅல்லி.
சேதனன்-ஜீவன்.
சேய-உயர்ச்சியான.
சேய்-மகன்.
சேறலை-போகாதிருந்தனை.

சை

சையம்-மலை.

சொ

சொல்வன்மை-சொற்களைச் சொல்லும வல்லமை.
சொற்கொடுமை-கொடுஞ்சொல்.

சோ

சோரசுகசாரணர்-திருடர் போல் வந்தசுகனும் சாரணனுமான தூதர்கள்.

ஞா

ஞாயிறு சூரியன்

த

தகர்-ஆடு
தசம்-பத்து.
தடம் வழி, விசாலம்
தணடக்கொடுமை-கொடிய தண்டனை.
தடுமாறுதல்-நிலைதிரிதல்
தந்தம்-பல். தஙகள் தங்கள். தத்தம் எனவும்வரும்.

தந்தி-யானை.
தரணி உலகம்.
தரம-தகுதி.
தாளம் முத்து.
தராதலம்-பூமி.
தரித்திரி-பூமி.
தவ-மிக.
தளைபபட்டு-கட்டுப்பட்டு.
தனபதி-குபேரன்.
தனு-வில், தேகம்.
தனயன்-புத்ரன்.
தன்னுரு-விசுவரூபம்.

தா

தாணு-சிவன்.
தாபதர்-தபசிகள்.
தாமகூடம-விசாலமான சிகரம.
தாயபாகம்-சுதந்தரம்.
தாரகவாச்சியன்-தாரக மென்னும் மந்திரத்தால் சொல்லப்படுபவன்
தாராபதி சந்திரன்.
தாரம்-மனைவி.
தானம்-இடம்.
தானவர்-அசுரர்.

தி

திண்டிறல்-மிக்கவலிமை.
திரம்-ஸ்திரம்
திரிகாலம்-மூன்றுகாலம்.
திரியக்கு மிருகமுதலியவை.
திருமி-திரும்பி
திருமுன்-சன்னிதானம்.
திரை-அலை.
திறம்பல்செல்லா-தவறாத.

தீ

தீக்கொளுவுவோர்-வீட்டில் தீவைப்போர்.
தீதண்டாத-தீமைசேராத
தீயதன்றீமையும் - தீமையினால் தீமையும்.
தீவினைப்பால்-தீவினையின்பிரிவு.

து

துப்பு-பயன்.
துரக்கும்-செலுத்தும்.
துருவினல்-தேடினல்.
துர்ப்பிக்ஷம்-வறுமைக்காலம்.
துவர்-சிவப்பு.
துவேஷம்-வெறுப்பு.
துனிய-அச்சமுடைய.

தூ

தூய பரிசுத்தமான.
தூர்த்தர்-சூதாடுகிறவர்கள்.

தெ

தெய்வத்தச்சன்விடலை-நளன்.
தெரிநிலைவினை-தெரியநின்ற கருமம்.
தெவ்வர்-பகைவர்.
தெழிப்பர்-அதட்டுவர்.
தெறுவான்-வெல்வான்.
தெனதிசைககிழவன்-யமன்.

தே

தேற்றம்-தெளிவு.

தை

தையல-பெண்

தொ

தொகாநிலை - கூடுதலில்லாத நிலைமை
தொகைநிலைத் தொடர்நிலையன்-கூடுகின்ற நிலைமையாகிய சமபாத குணமுடையவன்.
தொக்கவழி-கூடியபோது.
தொக்கும-இராமனுகக்கூடியும்-அந்தாயாமியாகி மறைந்தும்
தொடர்மொழி-ஒன்றற்கொன்று சம்பந்தப்பட்ட மொழி, பலவாறுகச்சொல்லும் தொடர்புடைய வார்த்தை.
தொடாது-(அச்சினத்திற்கு) ஏதுவாகாமல்.

தோ

தோரணம்-மாவிலை முதலியவற்றால் செய்யும் ஓர்சரம், குரங்கு.
தோற்றம்-பிறப்பு.

த்

த்ருஷியரகிதம்-பார்க்கக்கூடாத.

ந

நடர்-நடிப்பவர்கள்.
நண்பகல்-மத்தியான்னம்.
நண்பு-சிநேகம்.
நந்தனன்-மகன்.
நந்தனி-புத்ரி.

நந்து-சங்கு.
நல்கியவை தநல்காமை - கொடுத்தபின் கொடாதிருப்பது.
நல்லதனலனும் - நன்மையினால் நன்மையும்.
நல்லது-(இங்ஙனமானது எனக்கு) நன்மையானதேயாம், இது வழக்கில வருவது.
நவமணி-ஒன்பதுமணி.
நவ்-கபபல.
நறவு-கள்.
நனி-மிக.

நா

நாகராஜன்வழி - தேவராஜன் மரபில்
நாகம்-ஆகாயம், மலை, பாம்பு, குரங்
நாகவைரி இந்திரன். [கு
நாபபண நடு.
நாயகம்-தலைமை.

நி

நிகும்பலை-ஓர்யாகம்.
நிசாபதி-சந்திரன்.
நிதர்சனம-பிரத்தியக்ஷம்.
நித்யத்துவம சாகாமை.
நித்தன-எபபோதுமுள்ளவன்.
நியாமகதவம்-பிரபுத்துவம்.
நிரதிசயம்-தன்னின் மேற்பட்டது இலலாதது.
நிராகுலன-வருத்தமில்லாதவன்.
நிருதர்-அரககர்.
நிவாதி-நீககல்.
நிறம்-மாாபு
நிறுவல்-நிறுத்துதல்.
நிற்றி-நிற்பாய்.

நீ

நீர்மை-தன்மை.

நு

நுதல்-நெற்றி.

நெ

நெக்குருக-உடைந்து உருக.
நெககுவிடல்-பிளப்புவிடுதல்.
நெருநல்-நேற்று.

நொ

நொதுமல்-அயலவர்.

நோ

நோன்மை-தவம், பெருமை.

ப

பகர்ந்து-சொல்லி.
பகடு-யானை.
பகுதியஞ்சவது-அமைச்சு முதலிய அங்கங்கள் அஞ்சுங்காரியம்.[து.
பஞ்சவடி-ஐந்து ஆலமரங்களுள்ள
பஞ்சானனம் - விசாலமான முகமுடைய சிங்கம்.
படிவம்-உருவம்.
படுகுழி-யானையைப்பிடிக்கச்செய்யும்குழி.
படையில்-ஆயுதத்தால்.
பட்டாரகர்-தேவர்கள்.
பணி-ஆபரணம், பாமபு.
பதஙகம-விட்டில்.
பதவிபாகப்புணர்ப்பு-பந்தம மோக்ஷமென்னுமபகுதியில்சேர்தல்.
பதவியல்-அநதஸதிவ. நிலைமை.
பதாகை-துகிற்கொடி.
பயின்றார்-பழகினவா. [ல.
பரவுவோன்-துதிசெய்வோன்.
பரம்-உயர்வு, தேகாந்தரம்.
பரானனம - அன்னியர்வீட்டு அன்
பரிதி-சூரியன். [னம.
பருணிதன்-சமர்த்தன்.
பருமம-குதிாைககல்லணை.
பருவரல்-துன்பம்.
பர்வதாகிருதி-மலையுருவம்.
பலவின் ஈட்டம - பலஜாதிசேர்ந்த கூட்டம்.
பல்நாக இருக்கைப்புரை-பலமலைகளில் வாசத்துக்குரிய துவாரம்.
பழங்கண்-துன்பம.
பழுமரம்-ஆலமரம்.
பளிக்குஅறை-பளிங்கினாற் செய்த வீடு
பறவாக்கொக்கு-மாமரம்.
பறவைஅரசு-கருடன்.
பறை-வாத்தியம்.
பன்னி-மனைவி, சொல்லி.

பா

பாகசாதனன்-இந்திரன்.

பாங்கர்-பக்கம்.
பாகுபாடு-பிரிவு.
பாசம்-ஆசை, கயிறு.
பாதுகம-பாதம். இது ஆகுபெயர்.
பாதை-வருத்தம், வழி.
பாயாவேஙகை-வேங்கைமரம்.
பாயிரம்-வரலாறு.
பாரமார்த்திகம் - உயர்ந்த பொருளுடையது.
பாராவாரம் கடல்.
பார்யாவியோகம்-மனைவியைப் பிரிதல்
பாலமை-அறியாமை.
பாலலோசனன் - நெற்றியில் கண்ணுடைய சிவன்.
பால் பிரிவு, இடம்.
பாற-ஓட.

பி

பிரகிருதி-பிரதானகுணம்.
பிரதமாச்ரமம-பிரமசரியநிலை.
பிரதாபம்-வீரம்.
பிலவங்கம-குரங்கு.
பிற-(தம்மோடொத்த) மற்றவை.
பிறவரலுறின்-இதரவஸ்துக்கள் வந்தால் (மலையும மலையும் மோதும்போது மண்ணாங்கட்டி இடையில் வந்தால்) போல் என்பது கருத்து.
பிறழாத-தவிராத.

பீ

பீடு-பெருமிதம்.
பீலி-மயிலிறகு.
பீனத்துவம-பெருமை.

பு

புகல்-அடைக்கலம்.
புஷ்கரிணி-சபேந்தலக்ஷணம்.
புண்டரீகம-தாமரை.
புத்தரசு புதிய அரசாட்சி.
புத்தேளிர்-தேவர்.
புரிந்து-செய்து, விரும்பி.
புல்லிய-அற்பமான.
புனிதர்-பரிசுத்தர்.
புன்கண் துன்பம்.
புன்மை-அல்பம்.
புன்னாகவிருக்கம் - ஓர் விருக்ஷம்.

பூ

பூகம்-பாக்குமரம.
பூதரம-மலை
பூரகம் உள்வாங்கல்
பூர்வபக்ஷம்-முன்னுள்ள பிரிதி, ஆக்ஷேபம.

பெ

பெடை-பெண்பொது.
பெட்டக்க-விரும்பத்தக்க.
பெட்டகம-பெட்டி.
பெயர்ந்த-சென்ற.
பெயல்-மழை.

பே

பேழை-பெட்டி.

பை

பைங்கூழ்-பசியபயிர்.

பொ

பொகுட்டு-மலை.
பொதுமொழி - இருபொருட்கிளவி, நீயும் மற்றவரும் ஒப்பத்தக்க மொழி (நீதிமொழி)
பொய்யாயினன்-உயிர்நீங்கினன்.
பொருட்டெளிபு - பொருளின நிச்சயம்.
பொலன்-பொன்மைநிறம்.
பொழிலூடு-சோலையுள்.
பொற்பு-அழகு
பொறி-வாயில்.
பொன்-ஸ்ரீதேவி, ஓர் உலோகம்.
பொன்றி-மடிந்து.

போ

போசலர்-போசலதேசத்துஅரசர்.
போதரும-போகும்.
போலி - ஒன்றைப்போல் ஒன்றிருத்தல்.

பௌ

பௌவம்-கடல்.

ப்

ப்ராதுருவாச்சல்யம்-சகோதர வாஞ்சை.

ம

மகதியாழ் நாரதர்வீணை.
மகாதுவகை-மிகச்சிரேஷ்டமானவன்.
மகார்ணவம்-பெருங்கடல்,

மகுடம்-கிரீடம்.
மகோததி சமுத்திரம்.
மணிசெய்குன்று - இரத்தனத்தாற் செய்த மலைகள்.
மண்டேகம-தவளை.
மதாத்தகூழ்-செழித்தபயிர்.
மதலை-மகன்.
மதவியல்-இறுமாந்த சுபாவம்.
மதித்து-கடைந்து.
மத்தகம-தலை.
மந்திராதீனம்-மந்திரத்தின்வசம.
மம்மர்-துன்பம்.
மரக்கா-சோலை.
மரபுவழு-கிரமம தவறுதல்.
மருங்கு-பக்கம்.
மருந்து-அமுதம்.
மருப்பு-கொம்பு.
மலரவன்-பிரமன்.
மலையும்போது - சண்டைசெய்கையில்.
மறத்துறை-பாவவழி.
மறதோர்-பாபிகள்.
மறம்-வீரம்.
மறலி-யமன்.
மறவர்-வேடர்.
மற்கடேசன்-வானர அரசன்.
மனைமாட்சி-மனையறத்திற்குரிய நற்குணநற்செய்கையுள்ளவள்
மனோகோசரம்-மனதிற்குஎட்டுதல்
மன்றல்-மணம்.
மன்ற-மிக.

மா

மா-பெரிய, மிக.
மாகம்-ஆகாயம. (இங்கு வைகுந்தம்.)
மாசுணம்-பாம்பு
மாடு-இடம், பக்கம்.
மாணவப்படிவம்-பிரமசாரிரூபம்.
மாண்டவர்க்கு-மாட்சிமை பட்டவர்க்கு
மாண்-பெருமை.
மாதங்கம் யானை. மாது + அங்கம்-உமையை ஒருகூறுடையன் மா + தங்கம் - பெருமையானபொன்.
மாத்திரை-பொழுது.
மாதிரம-திசை, மலை.
மாயமான் - வஞ்சனையுள்ளவன், மாயையான மானுருவானவன்.
மார்ச்சாலம-பூனை.
மார்த்தாண்டன்-சூரியன்.
மால்-இந்திரன், விட்டுணு, மேகம.
மானம்-கௌரவம்
மானிடத் தெய்வக்குற்றங்கள்-மனுஷரால் வருவனவும் தேவர்களால் வருவனவுமானபிழைகள்.
மானிடன்-உமையை இடப்பாகமுடையவன், மனிதன்.
மானும்-ஒக்கும்.

மி

மிலைந்து-சூடி.

மீ

மீக்கூற்று-அதிகவார்த்தை.

மு

முகமன்-உபசாரம்.
முகில-மேகம்.
முதக்குறைவு பேரறிவு.
முதற்குறை- முதலில்செய்தபிழை
முரணிய-பகைத்த.
முரண்-இப்பி, வலி.
முழை-குகை.
முன்பால்-முன்னே. ஆல் அசை.
முன்னம்-யோசனை.

மூ

மூதண்டம்-பழையவானம்.
மூலததானை-மூலபலச்சேனை.
மூலம்-காரணம்.

மெ

மெய்க்கொற்றம்-தேகவல்லமை.
மென்மையோர்-எளியர்.

மே

மேக்கு-மேல்.
மேதகு மேன்மையான.
மேலவர்-தேவர்கள்.
மேவிநமுன்வன்மை-மேலோரிடத்துள்ள வல்லமை.
மேவலது-அடையாதது.

மை

மைதிலி-சீதை.
மைத்திராவருணி-சூரியவருணர்களம்சத்திற்பிறந்தவர்.

மைந்து-பலம்.

மௌ

மௌலி-கிரீடம்.

யா

யாகம்நூறியற்றினோன்-(இந்திரன்.)

யாக்கை-தேகம்

யாப்பு-கட்டுதல், செய்யுள்.

யாழ்-வீணை.

யூ

யூகம்-குரங்கு.

யோ

யோகம்-உபாயம்.

ர

ரமா-இலக்குமி.

ரா

ராமன்-அனைவருள்ளத்தும் நிறைந்து இன்பததைக்கொடுப்பவன்

வ

வசை-பழிப்பு.

வஞ்சி-பகைவர்மேற்செல்லுதல்.

வடி-கூர்மை.

வதனம்-முகம்.

வத்சலம-தயை.

வத்திரம் முகம், உடை.

வம்புஒலி-வீணான ஆரவாரம்.

வயங்கல்-விளங்கல்.

வயம்-வெற்றி, வலி.

வயின்-இடம்.

வரதன்-கொடுப்பவன்.

வரிக்க-கலியாணம்பண்ண.

வருடுதல்-தடவல்.

வருஷருது மழைக்காலம்.

வரைதல்-எழுதுதல்.

வரையறை-எல்லை.

வலாரி-இந்திரன்.

வலீமுகம் குரங்கு.

வல்விரைந்து-மிகத்துரிதமாய்.

வல்லராமன் எவற்றிலும் வல்லமையுள்ள பரசுராமன்.

வல்லுநர்-வல்லவர்.

வவ்வி-அபகரித்து.

வழியலைத்தல் - வழியில் அடித்துப் பொருள்பறித்தல்.

வழிஇயினர்-தவறினவர்.

வளாகம் இடம்.

வளை-சங்கு.

வள்ளல் - வரையாதுகொடுப்போன்.

வள்ளன்மை-ஈகை.

வறிது-வீண்.

வறுமை-தரித்திரம்.

வற்புறுத்தல்-உறுதியாகச்சொல்லல்

வன்னி - பிரமசாரியாகிய மதங்கருஷி (இருசிகமுனிவன்) என்வும் வழங்குவர்,

வா

வாகை-வெற்றி.

வாணி-சரஸ்வதி.

வாதாத்மஜன்-வாயுபுத்திரன்.

வாய்மை-சத்தியம்.

வாரம்-மலையடிவாரம்.

வாரிதி சமுத்திரம்.

வாளி அம்பு.

வி

விகங்கம்-பறவை.

விகாரம்-வேறுபாடான குணம் மனம் வேறுபடுதல். (காமக்குரோத முதலியன)

விகாரததின்இயல்பு-வாமனுவதாரம் முதலியவை.

விகிருதி-மாறுபாடு.

விசிகம அம்பு

விசிலேஷம்-பிரிதல்.

விடர்-வியபிசாரஞ்செய்வோர்.

விடலை மகன்.

விடை-உத்தரம், எருது.

விடைவல்லாளன்-சிவன்.

விட்டில்-விட்டிற்பறவை.

விண்டு விஷ்ணு.

வித்தகன்-ஞானரூபன்.

விபுதர் தேவர்.

வியந்து புகழ்ந்து.

வியன்-விசாலம்.

வியாப்தம்-வியாபித்தல்.

விரவிய-(நம்மிடம்) உற்ற.

விரிஞ்சன்-பிரமன்.

விரிந்தும்-வியாபித்தும்.

விருத்தி-அதிகரித்தல், ஓர் உரை.

விரைவு-வேகம்.

விரோசனகுனு-சூரியபுத்திரன்.
விலக்ஷணை - விசேஷலக்ஷணமுடையவன்.
வில்-தனுசு, ஒளி.
விழைவு-ஆசை.
விளிதல்-சாதல்.
வினைத்தூய்மை-செய்யுங் காரியங்கள் நல்லவையாதல், (காரியஞ்செய்வதில் மனந்திண்மையாதல்.)
வீடுற-நீங்க.

வீ

வீட்டலாம்-போக்கலாம்.
வீயும்-சாகும.
வீழ்ந்து-விரும்பி, மொய்த்து.

வெ

வெகுளி-கோபம்
வெம்பழல்-வெவ்விய அக்கினி.
வெருவி-பயந்து.
வெவ்வழி-தீயமார்க்கம்.
வெற்பு-மலை.

வே

வேணு-வில்.
வேண்டுங்கொல்-வேண்டுமோ?
வேதண்டம்-மலை.
வேந்து-அரசன்.
வேய் மூங்கில.
வேலை-சமுத்திரம்.
வேற்றுமைஅல்வழி-நல்வழி.
வேற்றுமைஅல்வழிப்புணர்ச்சிகள் வேறுபாடு அல்லாத சம்பந்த கள் (சேர்க்கைகள்) உங்கட் வேறுபாடுள்ள விவாகங்கள் எ றபடி.

வை

வைதரணீநதி-நரகலோகத்தின் ப கத்துள்ள நதி.
வைதேகி-விதேகன்புத்ரி (ஜனகி.
வையந்தந்தமகள்-பூமியின்புத்ரி (
வையம்-தேர், பூமி. [சீதை.
ஸ்மிருதி-தர்மசாஸ்திரம.
க்ஷணபங்குரம்-க்ஷணப்போதில் நசிப்பது.

## பிரகடனபத்திரம்.

மங்களவல்லிவிலாசம்—இது மாபாவியென்னும் மாமி, வாழவெட்டியென்னும நாத்தி, குண்டுணி இவர்கள் மங்களவல்லியென்னு மருமக -கும வலலாளகண்டியென்னும மருமகள் இருமாமி நாத்தி ட்கும் இயற்றிய கொடுமைகளைக்காட்டி இந்நூலாசிரியரா லியற்ற பட்டது பிரதி 1-க்குத் தபாற்கூலி உள்பட ... அணா - 9

சித்திரங்காட்டிச் சத்தியநிறுத்தியகதை ... ... ,, 5
விநோதசரித்திரம்... ... ... ... ... ... ,, 7
விவேகசரித்திரம் ... ... ... ... ... ... ,, 8½
* அரங்கரலங்காரமாலை. ... ... ... ... ... ,, 4½

இவை வேண்டியவர்கள் இந்நூலாசிரியராகிய பெங்களூர்-செ ற்ல்காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ. கோ. நாராயணசாமிபிள்ளையவ களிடத்திலும், சென்னை ரிப்பன்பிரஸ் ம-௱-௱-ஸ்ரீ சை. ரத்னசெட்டியார் அவர்களிடத்திலும் முன்பணமனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

* இந்நூலின் உரையும், இந்நூலாசிரியர் தந்தையாகிய ம-௱-௱-ஸ்ரீ மகாவித்வஜ்ஜனசேகரராகிய வி. கோவிந்தபிள்ளை அவர்களியற்றிய அரங்கரலங்காரக்கோவையும பின்னர் வெளிப்படுத்தப்படும். இக் கோவையின்கண் ஒவ்வோர் அலங்காரத்திற்கும் பலகவிகள் அமை க்கப்பட்டுள்ளன.